227

உ

கடவுள் துணை.

# சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள்.



இவை,

மாயூரம் முன்சீப்

ச. வேதநாயகம் பிள்ளை

அவர்களாலியற்றியதை,

சுத்தப்பதிப்பு

ப. குப்புசாமி முதலியாரவர்களால்
பதிப்பித்த பிரதிக்கிணங்க,

சென்னை - சூளை,
பெரியநாயகியம்மன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பெற்றது.

 1931. 

2

உ

கடவுள் துணை.

# சர்வ சமய சமரசக்
# கீர்த்தனைகள்.

இவை

மாயூரம் முன்சீப்

ச. வேதநாயகம் பிள்ளை

அவர்களாலியற்றியதை,

சுத்தப்பதிப்பு.

ப. குப்புசாமி முதலியாரவர்களால்

பதிப்பித்த பிரதிக்கிணங்க,

சென்னை - சூளை,

பெரியநாயகியம்மன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

காபி ரைட்] 1930. [விலை அணா 12.

## சர்வ சமய சமரசக் கீர்த்தனைகளின்

# பலபிரிவுகள்.

| விவரம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
| --- | --- |
| தேவதோத்திரக்கீர்த்தனைகள் | 1-முதல் 138-வரையில் |
| ஈசுவா வருட பஞ்சத்தைப்பற்றி | 139 |
| * இதோபதேசக்கீர்த்தனைகள் | 140-முதல் 161-வரையில் |
| 0 உத்தியோகசம்பந்தக்கீர்த்தனைகள் | 162-முதல் 175-வரையில் |
| —குடும்பசம்பந்த கீர்த்தனைகள் | 176-முதல் 192-வரையில் |

## * ஹிதோபதேசக் கீர்த்தனைகளின் விவரம்.

| விவரம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
| --- | --- |
| கடவுளை தியானிக்கும்படி வற்புறுத்தல் | 140 141 142 |
| துர்க்குணங்களை வெளியிடல் | 143 |
| மனமயக்கம் தவிர்த்தல் | 144 |
| நற்புத்தி கூறல் | 145 |
| நித்தியானந்தந்தேடல் | 146 |
| மள்ளஞானம் | 147 |
| பொருளாசையொழித்தல் | 148 |
| செல்வச்செருக்கு | 149 |
| உலகவாழ்வை வெறுத்தல் | 150 |
| உடலைவெறுத்தல் | 151 |
| பண தூஷணை | 152 |
| பரஸ்திரீகமனம்விலக்கல் | 153 154 155 |
| உய்யும்வழி | 156 |
| நெஞ்சொடுபிணங்கல் | 157 |
| துர்க்குணம்போன்ற நற்குணங்கள் | 158 |
| கஞ்சவஞ்சகத்தைப்பற்றி | 159 |
| மனமயக்கம் | 160 |
| கால தூஷணை | 161 |

## உத்தியோக சம்பந்தக் கீர்த்தனைகள் விவரம்.

| விவரம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
| --- | --- |
| நியாயபரிபாலனை செய்யவரம்வேண்டல் | 162 |
| துர்வழக்காளிகளைப்பற்றி | 163 |
| உத்தியோகசங்கட | 164-165 |
| பெரியதுரையாகிய கடவுளுக்கும்மனுஷத்துரைகளுக்கும்உள்ளபேதம் [பற்றி | 166 |
| கோட்சொல்லும்உத்தியோகஸ்தர்களை | 167 |
| சாமியைநினைக்கநேரமில்லையென்றமுறை | 168 |
| உத்தியோகத்தைவெறுத்தல் | 169 |
| துன்பத்துக்கு அஞ்சாமை | 170 |
| பிறர்மேற்குறைகூறாமை | 171 |
| பரிதான கண்டனம் | 172-173-174 |
| பிரபுத்துவதூஷணை | 175 |

## குடும்ப சம்பந்தக் கீர்த்தனைகளின் இலக்கம்.

| விவரம். | கீர்த்தனைகளின் விவரம். |
| --- | --- |
| தாய்தந்தையரை நமஸ்கரித்தல் | 176 |
| தகப்பன்மகனுக்குபுத்திகூறல் | 177 |
| தகப்பன்மகளுக்குப் புத்திகூறல் | 178 |
| உத்தமஸ்திரீயின் லக்ஷணம் | 179 |
| பெண்பார்க்கத் தூதனுப்புதல் | 180 |
| தூதன் பெண்பார்த்துவந்து சொல்லல் | 181 |
| தலைவியிடத்து வைக்கவேண்டிய நேசத்தைப்பற்றித்தலைவன்கூறுதல் | 182 |
| தலைவனுடைய மேன்மையைத் தலைவிதோழிக்குக்கூறுதல் | 183 |
| துன்பஞ்செய்தாலுந் தலைவனேகதியென்று தலைவி தோழிக்குச்சொல்லுவது | 184 |
| தலைவன்செய்தநன்மையை தலைவிகூறல் | 185 |
| மாமிநாத்தி முதலானவர்களின் கொடுமைப்பற்றிஒருஸ்திரீ முறையிடுதல் | 186 |
| கணவனைப்பகைத்தஸ்திரீயை அவள்தாய்கண்டித்தல் | 187 |
| தங்களுக்குப் படிப்பிக்கும்படிஸ்திரீகள் புருஷர்களை வேண்டுதல் | 188-189 |
| மூடனை விவாகஞ்செய்யாதபடி ஒருஸ்திரீயைத்தடுத்தல் | 190 |
| மைத்துனர்கலியாணத்திற்பாடிய பரிகாசகீர்த்தனை | 191 |
| மைத்துனருக்குப் புத்திபோதித்தல் | 192 |

## சர்வ சமய சமரசக் கீர்த்தனைகளின்

# அகராதி.

| கீர்த்தனைகளின் ஆதி. | பாட்டிலக்கம் | பக்கம் |
|---|---|---|
| இன்னம் ஏதோ | 61 | 54 |
| ஏதோசோதனை | 75 | 65 |
| ஏழைக்கிரங்க | 45 | 41 |
| ஏன் இன்னம் | 47 | 42 |
| ஐயனே உயர் | 32 | 31 |
| ஐயனே உன் அழகை | 43 | 39 |
| ஐயாஎனை | 14 | 13 |
| ஒருவர்மேலும் | 171 | 153 |
| ஓ ஓ ஜெகநாதா | 114 | 95 |
| ஓ ஓ பிரபுத்துவமே | 175 | 158 |
| ஓகோகாலமே | 161 | 142 |
| ஓடிநான்உனை | 2 | 2 |
| கடைக்கண்ணால் | 51 | 46 |
| கருணாகடாக்ஷம் | 56 | 50 |
| கருணாகரப்பரம் | 46 | 42 |
| கருணாகரமூர்த்தி | 81 | 70 |
| கருணாசாகரா | 69 | 61 |
| கருணாலயநிதியே | 128 | 107 |
| கருணைநீசெய்ய | 73 | 64 |
| காக்கவேண்டும் | 34 | 32 |
| கா[illegible] எனக்கு | 9 | 9 |
| காத்தருள் | 71 | 63 |
| கேளும் பூமான்களே | 189 | 181 |
| சஞ்சலமாய் | 85 | 7 |
| சமயம்ஈதையா | 117 | 98 |
| சம்மதிஎனக்கு | 31 | 30 |
| சரணம் சரணம் | 21 | 21 |
| சரணம் சர்வேசா | 78 | 68 |
| சருவவினோதா | 130 | 108 |
| சருவேசாசருணம் | 166 | 97 |
| ஜாலம்செய்ததோ | 40 | 37 |
| சித்தம்இரங்கி | 11 | 10 |
| சித்தம் உலர்ந்தருள் | 4 | 4 |
| சித்தம் எப்படியோ | 82 | 70 |
| சிந்தைக்குள் | 20 | 20 |
| சீச்சீநீர்லஞ்சம் | 171 | 154 |
| சீலம்நீதா | 22 | 22 |
| செய்யவேண்டுமானு | 158 | 139 |
| ஜெகநாதா | 58 | 52 |
| ஞானகுருபரவடிவே | 107 | 91 |
| ஞானமார்க்கம் | 93 | 7 |
| ஞானோதயவாம் | 132 | 109 |

| கீர்த்தனைகளின் ஆதி. | பாட்டிலக்கம் | பக்கம் |
|---|---|---|
| ஏதோ இன்னம் | 105 | 89 |
| தருணமீதையா | 97 | 82 |
| தருணம்தருணம் | 86 | 74 |
| வேதநாயகனே | 25 | 24 |
| தேவனேஉன்னை | 28 | 27 |
| தேவாதி தேவாபல | 92 | 78 |
| தேவாதிதேவனே ஜீவனே | 99 | 84 |
| தேவாதிதேவனே தயை | 17 | 16 |
| தேவாதி தேவேயே | 66 | 56 |
| நம்பினேனுனை | 98 | 83 |
| நல்லபெண்ணை | 180 | 168 |
| நல்லவரம் | 126 | 105 |
| நாதனே தயை | 63 | 56 |
| நாதா அடியேன் | 102 | 86 |
| நாதா கணவேதா | 112 | 94 |
| நாதா கிடையாதா | 129 | 107 |
| நாதா நிரந்தரவினோதா | 33 | 31 |
| நாயகர் பக்ஷமடி | 183 | 175 |
| நாளே நல்லநாள் | 104 | 88 |
| நானே உனை | 89 | 76 |
| நானே பொதுநீதி | 162 | 143 |
| நிதம் நிதம் | 100 | 85 |
| நிச்சயம் இதுதானே | 68 | 61 |
| நித்தியானந்தத்தைநாடு | 146 | 123 |
| நிரந்தரனே | 36 | 33 |
| நினைப்பதெப்போது | 163 | 150 |
| நின்பதமேதுணை | 23 | 28 |
| நீமலைக்காதே | 144 | 121 |
| நீயேகதிஎனக்குள் | 65 | 58 |
| நீயேசர்வசக்தன் | 106 | 90 |
| நீயேதுணைபரனே | 111 | 94 |
| நெஞ்சே இந்த | 143 | 119 |
| பஞ்சநீர் | 139 | 115 |
| பஞ்சவர்ணக்கிளி | 181 | 170 |
| பணமே உன்னால் | 152 | 131 |
| பத்தினிபோல் | 182 | 174 |
| பரப்பிரம்மமே | 109 | 92 |
| பரனே அடியர் | 29 | 28 |
| பரனேபக்தர் | 60 | 53 |
| பாசத்தால் | 52 | 47 |
| பாதம் நம்பினேனே | 110 | 93 |

சர்வசமய சமரசக் கீர்த்தனைகளிலுள்ள

## இராகங்களின் அகராதி.

| இராகம். | கீர்த்தனைகளின் இலக்கம் | இராகம். | கீர்த்தனைகளின் இலக்கம் |
|---|---|---|---|
| எதுகுலகாம்போதி | 56-61-143-144 | கௌளிபந்து | 114-116-154 |
| கண்டா | 96 | சங்கராபரணம் | 60-152-156 173 |
| கமாஸ் | 40-55-77-153 | சஹானா | 73-83 90 84 178 |
| கரகரப்ரியை | 54 | | |
| சரசாங்கி | 134 | பங்களா | 85 |
| சாமந்தா | 91 | பந்து | 105 |
| சாமா | 41-88-101-10[illegible] | பந்துவராளி | 51-159 |
| சாரங்கா | 49-179 | பரஸ் | 8-58-65-82-92 191 |
| சாவேரி | 105-162-184 | பலஹம்சா | 93 |
| சாளங்கபைரவி | 95 | பியாகடை | 30-75-104 |
| சுத்தசாவேரி | 86-89 | பியாகு | 18-64-103-110 134-176 |
| சுப்பிரதீபம் | 7 | பிலகரி | 128-183 |
| சுருட்டி | 17-120-145 | புன்னாகவராளி | 34-125-165-190 |
| செஞ்சுருட்டி | 39-43 | பூபாளம் | 66 |
| சைந்தவி | 45 | பூரணகௌளை | 6 |
| சௌராஷ்டிரம் | 135-155-163-166 172-182-192 | பூரணச்சந்திரிகை | 127 |
| ஜங்கலா | 126 | பூரிகல்யாணி | 81-98 |
| ஜயந்தஸ்ரீ | 33 | பைரவி | 16-112-122-171 |
| ஸ்ரீராகம் | 6 | மத்யமாவதி | 48-59 |
| தர்பார் | 12-161 | மணிரங்கு | 11 |
| தன்னியாசி | 46-68-158 175 | மனோகரம் | 136 |
| தீனசங்கராபரணம் | 133 | மாஞ்சி | 44 |
| துசாவந்தி | 2-27 | முகாரி | 24-71-170-181 |
| தேசமுகாரி | 115 | மோகனம் | 9-47-121-123 169 177-189 |
| தேசிகதோடி | 14-137 | யமுனா கல்யாணி | 21 |
| தேவகாந்தா | 1 | ரீதிகௌளை | 78 |
| தேவமனோகரி | 87-149 | லலிதா | 79 |
| தோடி | 70-72-76-107 138 | வசந்தா | 160 |
| நாகத்தொனி | 99 | | |
| நாதநாமக்கிரியை | 10-15-50-113 117-164-168 | | |
| நீலாம்புரி | 188 | | |

உ

கடவுள் துணை.

# சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள்.

## 1. இராகம் - தேவகாந்தாரி, ஆதிதாளம்.

பல்லவி.

எக்காலமும் உந்தன் பொற்கால் பணிந்துகொண்
டிருக்க நீவரம் அருள்வாய் — எக்கா

அநுபல்லவி.

தக்கோர் அபிமான ஞான சீலா
சகல புவனரக்ஷ காரு கூலா — எக்கா

சரணங்கள்.

1 சந்த மேவுபிர பந்த மாலைபாடு
கந்தமார் உன்அர விந்தபாதம் சூடி
வந்த ஞதிகள் அநந்தமே சொல்லி
விழுந்த பூமியில் எழுந்து நைந்துருகு — எக்கா

2 துங்க சாதுஜன சங்கமோடு கூடி
பொங்கும் ஞான அளங்கவாரி ஆடி
அங்கமே பரவ சங்கொ ளப்பல
தங்களோடு சுப மங்களங்கள் சொல்லி — எக்கா

3 பழுதிலாது தினம் முழுதும் உன்னைநாடி
தொழுது நேசமுடன் அழுது பாடிஆடி
ஒழுகு செந்தழலின் மெழுகுபோல மனம்
இளகியே அதிக புளகிலாங்க முடன் — எக்கா

4 பூதலம் பரவு பாதவேத நாதா
சாதகம் செய்யும் அதேநீத தாதா
போத நாயகனே பூத நாயகனே
கீத நாயகனே வேத நாயகனே — எக்கா

## 2. இராகம் - துசாவந்தி, ஆதிதாளம்.

பல்லவி.

ஓடிநான் உனைத் தேடிவந்தேன் எனக்
குதவி செய்தருள் ஐயனே ஓடி

அநுபல்லவி.

நாடி உன்பாதம் தொட்டேன்
கோடி தரம் கும்பிட்டேன்
நாதவினோத பிரசாத பிரபோத
அபேத அதீத நிர்வாதகி யாதனே ஓடி

சரணங்கள்.

1 அற்பமான பதார்த்தம் சற்றும்விரும்பேன்
ஐயா இது யதார்த்தம்
அற்புததரமார்த்தம் கொடுத்தருளில்
அதுவே உபயோகார்த்தம்
பற்பல விசித்திரனே
கற்பனு சமுத்திரனே
பாச விநாச சுரேச நரேச
பிரகாச விகாச உலாச விலாசனே ஓடி

2 வந்துனையே அடுத்தேன் கீர்த்தனமாலை
வகைவகை நான்கொடுத்தேன்
வந்தனம் கைகொடுத்தேன் நீவசிக்க என்
மனக்கோயிலுங் கொடுத்தேன்
அந்தமனை உனக்கே
உந்தன்மனை எனக்கே
ஆயவிதேயர்கள் நேயசகாய
அகாய உபாய நியாய விதாயனே ஓடி

3 அன்பர் உபாசனனே பூதலந்தன்னில்
அதர்ம விமோசனனே
இன்பநிவேசனனே பூதலந்தன்னில்
இதயசிம்மா சனனே
என்பவங்களைத் தீர்ப்பாய்
உன்பதந்தன்னிற் சேர்ப்பாய்
ஏக அநேக திரிலோக நிர்வாக
தெய்வீக விவேக அமோக தியாகனே ஓடி

## 3. இராகம் கேதாரகௌளம், ஆதிதாளம்.

பல்லவி.

எனை ஆதரிப்பாயே என்மன இருள்
தனையே பிரிப்பாயே எனை

அநுபல்லவி.

வினையே அரிக்கும் செல்லா
வீணனென் ஒருபுல்லா
நினையா என்மனம்கல்லா
நிதம் அதனுடன் மல்லா
நிச்சயப்பிர போதனே
அக்ஷயப் பிரக்கியாதனே
சஜ்ஜனப் பிரபாதனே
துர்சஜ்ஜனப் பிரமாதனே எனை

சரணங்கள்.

1 துக்கப்பிர பஞ்சத்தொல்லை
சொல்வதற் குண்டோ எல்லை
திக்குவே றெனக்கில்லை
தெய்வமேகேள் என்சொல்லை
சிஷ்டர் சமுதாயனே
துஷ்டர்கள் அபாயனே
இஷ்டர்கள் சகாயனே
அஷ்டகுண நேயனே எனை

2 அடியனுன் வினைவசம்
ஆயினேன் இதுநிசம்
படியிற் கருணைரசம்
பாலித்தருள் கவசம்
பக்தஜன நேசனே
சுத்தமன வாசனே
சித்தமல நாசனே
வித்தக விறுசனே எனை

3 மருவிய பாசவலை
மாட்டி உற்றேன் கவலை
தரும சைதன்னியநிலை
தந்தென் மயக்கதொல்லை

சங்கட நிவாரகா
எங்கள்குல தாரகா
பொங்குசுக தாயகா
அங்கவேத நாயகா ... எனை

---

4. இராகம்-காம்போதி, ஆதிதாளம்.

பல்லவி.

சித்தம் உவந்தருள்செய்ய இத்தனை தாமதமேது
சீலனே புவனபரி பாலனே மூலனேநீயுன் சித்தம்

அநுபல்லவி.

நித்தனே புவியெங்கும்பிர சித்தனே நிகலலோக
கத்தனே ஜீவகோடிகட் கத்தனே சுத்தனேநீயுன் சித்தம்

சரணங்கள்.

1 அசடனுனென்பதென் னரகசியமாபெற்ற
அன்னையிடம்உண்மை சொல்லவேபயமா
வசஞ்செய்வதருள்வதுனக் கோர்விஷயமாயாவும்
வல்ல உனக்கிதென்ன அதிசயமா
வசனசா துரியனே
மன்னமா துரியனே
சுஜனர்கள் பிரியனே
சுரர்தொழும் பெரியனே சித்தம்

2 நிதமும்உனதுபத கைங்கரியமேசெய்ய
நீயருளெனக்குச் சுதந்திரியமே
அதுவேயெனக்குப்பெரும் சௌகரியமே இனி
ஐயனேவேண்டேன் வேறுஐசுவரியமே
அதிசய அப்பிரமேயா
அகணித சுப்பிரகாயா
நீதிநெறி செப்பும்வாயா
வினையசங் கற்பதூயா சித்தம்

3 பூதபௌதிகமெல்லாம் நிறைவோனே நல்ல
புண்ணியத்திருமறையை அறைவோனே
வேதநாயகன்மனம் உறைவோனே ஞான
விழியில்லா தவருக்கு மறையோனே

போதகப் பிரகாசனே
புண்ணியப் பிரதேசனே
சாதககிரு பேசனே
தாசருட் பிரவேசனே சித்தம்

5. இராகம் - அசாவேரி, ஆதிதாளம்.

பல்லவி.

உன்னிடத்திற்சொல்லாமல் யாரிடத்திற்சொல்லுவேன்
ஓ ஓ ஜகதீசா உன்னி

அநுபல்லவி.

பொன்னிடத்தாசையறு புனிதர்கள் தமக்கின்பம்
பொழிதருவேஇந்தப் புவியில்நான்படுந்துன்பம் உன்னி

சரணங்கள்.

1 வயிறுபசிக்கும்பிள்ளை மாதாஇடம்போமன்றி
அயர்வுறும்பெரும்பிணி அருமருந்தாலன்றி
அயலொன்றினுலே அதுதீருமோகன
வெயிலால் வருந்துவோரே
வேண்டுவர் நிழல்நீரே
உயிர்ப்பயி ரோம்புங்காரே
உனையன்றிக் கதியாரே
உலைவுறுசல்லடை போற்பலஓட்டை
உளதாகியவெறும் புழுமலக்கூட்டை
நிலையெனமனக்கவி செயும்பலசேட்டை
நித்தியம்நான்அத ஞற்படும்பாட்டை உன்னி

2 நாதனேநான்பிழை யாதுசெய்யினுய்நின்னை
நம்பினேன்என்மேலின்னம் க்ஷாத்ரமா-பாரில்
ஓதரும்புலச்சத்து ராதியர்கையிலென்னை
ஒப்பிவிக்குதர்ம சாஸ்திரமா-று
மாதர்மேற் செல்லும்நேத்திரம்
வாயே அபத்த யாத்திரம்
தீதுரைகொள்ளுஞ் சுரோத்திரம்
சிற்றின்பம் வேண்டுங்காத்திரம்

தீயஅவபவங்கள் செயுந்தினமோசம்
சிந்தையிற்குடிகொண்ட தாசபாசம் ..
நாயேன்செய் கைகளேஆபாசம்
நாற்பக்கத்திலும் நான்படுங்கிலேசம் உன்னி

3 எத்தனைசுமைபாவம் வேண்டுமானுலுமுந்தி
எனக்குக்கொடுக்கலாம் அச்சாரமே-எந்தன்
அத்தானேநானுன்சே யென்றறிந்தும் நோய்செயுமாயைக்
கார்தந்தார் இந்த அதிகாரமே-சர்வ
உத்தமஞ்சேர் நிர்தோஷ
உன்னதமா விசேஷ
பத்தர்நித்திய சந்தோஷ
பரசமயத்து வேஷ
பாக்கியமலர்ந்தருள் பழுக்கும்உத்தியான
பலபுவனுத்மகோ டிகள்அபிமான
ஆக்கியவேத நாயகன்ஸ்வாதீன
அன்னை தந்தைகுரு தெய்வஞ்சகலமுமான உன்

---

6. இராகம் - பூரணகௌளை, ஏகதாளம்.

பல்லவி.

என்பிழைகள் பொருத்தாள்வாய் எனை அலைக்கும்
துன்பவினை அத்தருள்வாய்

அநுபல்லவி.

முன்பாவியே ஜெபிக்கும்
அன்பர்கள் அனுபவிக்கும்
இன்பமே அவர்விரும்பும்
நின்பதகமலம் நம்பும்

சரணங்கள்.

1 நேயனைப்போல் விவகரிப்பேன் துதிகவிகள்
ஆயிரம்உண்டாக்கினிரிப்பேன் என்செய்கையெல்லாம்
வாயின் அபலாதுமனந்தோயும் அன்புளதோசிறு
நாயின்அன்புமேயில்லாமல் தீயவம்பனுய்த்திரியும் உன்

2 எண்ணவொண்ணுமோ என்பவயேஐயனே இந்த
மண்ணினில்என் ஜன்மம்அவமே தினந்தினமும்
உண்ணலும்நித்திரை தனை நண்ணலும்பெரும்பவங்கள்
பண்ணலும்அல்லா துன்பதம் என்னல்செய்தறியேன்ஸ்வாமி

3 போதகம்என்னிடம்லய மேஎன் மனம்பஞ்ச
பாதகங்கட்காலயமே புவனமிசை
மாதவம்புரிபவர்க்குக் கோதயலும்இகபர
சாதகங்கொடுத்தருளும் வேதநாயகா இரங்கி — என்

7. இராகம் - சுப்பிரதீப, திரிபுடை.

பல்லவி.

வினையே எனையே மேவா தருளே — வினை

அநுபல்லவி.

நினையேநம்பினே னின்மலப்பொருளே — வினை

சரணங்கள்.

1 கனவிலுந்தருமத்தைக் கண்டறியேனே
அனவரதமும்உன தருள்குறியேனே — வினை

2 பாவமென்பதற் கொருபதியானேனே
ஜீவனும்வழி தெரியாமற் போனேனே — வினை

3 உதரபோஷணையன்றி இனைநினையேனே
இதயந்தனில்உன்னடி இணைபுனையேனே — வினை

4 பூதலந்தொழும்அதி புண்ணியமித்திரனே
வேதநாயகன்தொழும் விமலபுத்திரனே — வினை

8. இராகம் - பரசு, ரூபகம்.

பல்லவி.

ஆண்டருளே கருணை பூண்டருளே

அநுபல்லவி.

தாண்டருஞ் சுடராக விளங்கும்
சோதியே உயர் நீதியே எனை — ஆண்ட

1 என்னை ஆள்வதுபாரமா என
இடம்வர வெகுதூரமா
அன்னைக்கும் உபசாரமா எனக்
கருள்புரிய இன்னேரமா கன

ஆயனே மெஞ்ஞான
சூரியனே சர்வலோக
காரியனே மிகுந்தஔ
தாரியனே ஜகந்தனில்

உன்னையல்லது பின்னையார் துணை
யோகனே சுகபோகனே எனை ஆண்ட

2 எனதுடலெனும் புல்லையே-காக்க
எவர்க்குங்காட்டுவன் மல்லையே
தினமும் ஆயிரந்தொல்லையே-இதில்
சிறிதுமேசுகம் இல்லையே

சேதனனே பெரியபு
ராதனனே ராமதி
கேதனனே மெய்ஞ்ஞான
சாதனனே அனுதினம்

நினதுபாதம் நம்பினேன் அதி
நேசனே பிரகாசனே எனை ஆண்ட

3 பொறுமை உனக்குச்சொந்தமே-நான்
புரியும்பிழை அநந்தமே
மறுமையுறு நிர்ப்பந்தமே-கெட
மலர்ப்பாரவிந்தமே மன

மாக்ஷியனே அடியர்கண்
காக்ஷியனே சர்வாண்ட
சாக்ஷியனே தனிஅர
சாக்ஷியனே தினந்தினம்

இறைவன்வேத நாயகன்பணி
கீர்த்தியே அறமூர்த்தியே எனை ஆண்ட

## 9. இராகம் - மோகனம், திரிபுடை தாளம்.

பல்லவி.

சாக்ஷியெனக்குக் கொடாமலிருக்கிற
காரணம் ஏதையா சாக்ஷி

அநுபல்லவி.

சாக்ஷியாய்நிற்கும் சருவாதிகாரனே
மாக்ஷியுடையோர் மகிழ் நிர்விகாரனே சாக்ஷி

சரணங்கள்.

1 அந்தரங்கபத்தி அற்றவனென்றோ
அக்கிரமத்தில்பெயர் பெற்றவனென்றோ
பந்தப்பேய்க்குள்ளதை விற்றவனென்றோ
பாதங்களெல்லாங் கற்றவனென்றோ சாக்ஷி

2 மறந்தும்ஒருமெய்சொல் லாதவனென்றோ
மருந்துக்கும்நன்மைஇல் லாதவனென்றோ
சிறந்தமெய்ஞ்ஞானங்கள் லாதவனென்றோ
தேசத்தார்க்கெல்லாம்பொல் லாதவனென்றோ சாக்ஷி

3 ஏசிமறையை இகழ்ந்தவனென்றோ
ஈனமதத்தைப் புகழ்ந்தவனென்றோ
நீசெய்தநன்றி மறந்தவனென்றோ
நீசர்க்குள்மெத்தச் சிறந்தவனென்றோ சாக்ஷி

4 ஆதிமத்தியாநந்த ரஹிதமகேசா
அற்புதசின்மயா னந்தவிலாசா
வேதவேதாந்த விதிஉபதேசா
வேதநாயகன் இதயப்பிரகாசா சாக்ஷி

---

## 10. இராகம் - நாதநாமக்கிரியை, ரூபகதாளம்.

பல்லவி.

அருள்புரிவாயே எனதுள
மருள்தெரிவாயே

அநுபல்லவி.

இருளிகரும்சுருள்கொள் ஒதியா
இலகும்பொருள் உலகம்புரிகலைசம்படர் விலகும்படி அருள்

சரணங்கள்.

1 நினைவெல்லாம்உன்நினைவதா யென்னெஞ்சம்உண்ணுதோபழி
புனையும்வாய்வெறும்பேச்சைவிட்டுனை புகழ்ந்துபண்ணுதோ
சிருதினையளவு மெய்தனைவிடாது
சிந்தித்துனை வந்தித்திடு புந்தித்திடம் வந்துற்றிட அருள்

2 எத்திசையும்உன்னுருவமாகவே இலகக்காணேனோசொந்த
அத்தம்யாவும்நீயென்றேமிக ஆசைபுணேனோகன
பத்தியாயுனை நித்தம்போற்றிப்
பாடித்தினம் நாடித்தவம் நீடிக்கதி கூடிக்கொள அருள்

3 நீதமாயரும்போதமாயெங்கும் நிறையுங்கர்த்தாவே நாளும்
வேதநாயகன்காதல்மனம்பெண் மேவும்பர்த்தாவேகொண்ட
ஏதமறப்பிர சாதம்உதவி
இழிவண்டியுபழிவிண்டுநல்வழிகொண்டுனைவிழிகண்டிட அரு

---

11. இராகம் - மணிரங்கு, திரிபுடை தாளம்.

பல்லவி.

சித்தம்இரங்கிநல் முத்தர் தங்கோஷ்டியிற்
சேர்த்தெனைக் கார்த்தருளே

அநுபல்லவி.

உத்தமரிலர் தஞ் சித்தமலர்உறை
வோனே கோனே வானே தேனே சித்த

சரணங்கள்.

1 நின்னடித்தொண்டனு னென்னஅறியும்
நிதமஉலகத்தானே
என்னஉன்தொடின் பலனென்றனைப்புவி
ஏசில்என் சொல்வேனே
பன்னரும்உன்னருள் என்னருகாகிடப்
பண்ணே கண்ணே எண்ணே விண்ணே சித்த

2 பொய்த்தெய்வங்களைப் போற்றிப்பெரும்பழி
பூண்டவா தம்முனமே
மெய்த்தெய்வம்உன்னைத் தொழும்எனக்கென்ன
விசேஷப் பிரயோஜனமே
கைத்தொழில்அண்டம் அனைத்தையுந்தாங்கிடு
கையா துய்யா மெய்யா ஐயா சித்த

3 கழுவக்கழுவ அழுக்குடல்மீது
சலந்தடரும் தன்மையே
தழுவிஎன்னெஞ் சுறு மாசுகள்நீங்கிடத்
தந்தருள்வாய் நன்மையே
எழுமண்பொடுவேத நாயகன்போற்றிடும்
ஏகா யோகா தியாகா சித்த

---

12. இராகம் - தர்பார், திருபுடைதாளம்.

பல்லவி.

என்னை ஆளையா என்விண்ணப்பம்
தன்னைக்கேளையா

அநுபல்லவி.

மின்னைநிகரும்வாழ்வை வெறுப்பவர்க்குரியோனே
அன்னைபிதாசற்குரு வாகியபெரியோனே என்னை

சரணங்கள்.

1 அடியேன்மேற்சினமா என்குறைநீக்கி
ஆள்வது கனமா
கடினச் சின்மனமா என்றுநெஞ்சங்
கவலைக்காசனமா
படியில்என்னகத்துறு பாவஇருளைமாற்றித்
திடமுறவேமெஞ்ஞான தீபந்தனையேற்றி என்னை
2 என்றுஞ்சஞ்சலமா ஐயனேமாயைக்
கிவ்வளவு பலமா
வென்றுகொள்புலமா அசனுல்ஏழை
மெலிவது நலமா
நன்றுருவாகியநாதா என்முகம்நோக்கிக்
குன்றெனநான்செயுங் கொடுவினைகளைப்போக்கி என்னை
3 கைவிடலாமா என்னிடம்வரக்
கால்மலர் சோமா
நைவினைபோமோ இனிமைதங்கும்
நன்னய நாமா
தெய்வநாயகனுகித் திகழும்அகளங்கா
கைவல்லியஞானநெறி கமழ்மதுரப்பிரசங்கா என்னை

4 நித்திக்குந்தேனே அமுதேகன்
தேவர்கள்கோனே
எத்திக்குந்தானே எள்ளுமெண்ணெய்போல்
இருக்குங்கோமானே
புத்தியுடையோர்சூட்டும் புகயமலேஅணிதேவனே
புத்தியுடனேவேதநாயகன் பணிவோனே உன்னை

---

13. இராகம் கல்யாணி, ரூபகதாளம்.

பல்லவி.

தருணங்கருணைபுரிகுவாய் ஐயா-உனக்கனந்தங்கோடி
சரணஞ்சரணந் தெரிகுவாய்மெய்யா தருணங்

அநுபல்லவி.

அருணகோடி தேஜோமயனேபொன்
திரணமென்றுன்னுவோர்பயனே இத் தருணங்

சரணங்கள்.

1 இந்திரியசத்துருக்கள் செய்மோசம்
என்னசெய்வேனிர்வகித்தால் பிரயாசம்
நிந்தனையா அதுபந்தபாசம்
நீங்கச்செய்வாய் புண்ணியஉபதேசம்
நீயேகதியன்றோ ஒரு
தாயேதுயர்ஒன்றோ சிறு
நாயேன்கெடல்நன்றோ கன
தீயேன்உடல்குன்றோ இது தருணங்

2 கோரமாய்த்தன் பிள்ளைசெய்யினுந்தீது
கோபித்துநீக்கிடுந் தாயுண்டோஓது
காரமாநான்செய்யும் பாபம்போறாது
காயத்தைஎடுத்தேன் அரு
மாயத்தைஅடுத்தேன் அதி
யாயத்தைஉடுத்தேன்
நேயத்தைவிடுத்தேன் இது தருணங்

3 நச்சுமாதனைதயும்வைத்தவன் தானே
நாள்தோறுங்காவல்செய்யாமல் இரானே
இச்சகமீதில்எனை அமைத்தோனே
என்னைநீஆளாவிடிற் பிழையேனே

ஓகந்தழையுருவே சுக
போகந்தழைதருவே கன
யோகந்தனைழதிருவே முதிர்
பாகந்தழைகுருவே இது தருணங்

4 நிலரும்நானுறும் பாதகச்சேரு
நீக்கிடப்போதுமே நின்னருள் ஆறு
விதியும்கதியும் இல்லையேவேறு
வேதநாயகனே அருள்பேரு
பேதத்துருவோனே பல்
பூதம்பெருமானே கன
போதத்தமாகோனே உன்
பாதத்தைவிடேனே இது தருணங்

---

14. இராகம் - தேசிகதோடி, ஆதிதாளம்,

பல்லவி.

ஐயா எனை ஆண்டருளோஉனை
அண்டினனே மனம் வேண்டினனே ஐயா

அநுபல்லவி.

பொய்யாம் வாழ்வினில் நான்குழையாமல்
போகாதிகளில் என்மனம் நுழையாமல்

சரணங்கள்.

1 ஒருநிமிஷமு முனதடிமறவாமல்
உலகழியினு முனதருள்துலவாமல்
இருதயமதனிலோ ரிடற்பிறவாமல்
இழிவுறுபழியோடு நானிறவாமல் ஐயா

2 உன்னையலாதொரு வரையும்தொழாமல்
உதரநிமித்தம் எங்கும்ஓடியழாமல்
இந்நிலமீது துராசைஎழாமல்
இறந்தபின்னுநெரி நரகில்விழாமல் ஐயா

3 நல்லவழிதனை எந்நாளும்விடாமல்
நாட்டில்அகடனென நான்பேரெடாமல்
பலவகையாகிய பழிகள்தொடாமல்
பாவையர்மோகத்திற் படிந்துகெடாமல் ஐயா



4 என்னுயிர்போல எவ்வுயிரையும்பேண
இகசுகபோகத்தை என்றுமேகாண
மின்னும்குறுபா ணாதனைப்பூண
வேதநாயகனே நானுனைக்காண ஐயா

---

15. இராகம் - நாதநாமக்கிரியை, ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவரந்தருவாய் ஸ்வாமிஇந்த

அநுபல்லவி.

பந்தவினையெலாம் அறவேண்டும்உன்
பாததரிசனம் பெறவேண்டும் இந்த

சரணங்கள்.

1 தினமும்உன்பதமலர் தொழவேண்டும் நான்
தேகபரவசமா யெழவேண்டும்
அனல்மெழுகாயுருகி யழவேண்டும் இனி
ஆனந்தக்கடலில்நான் விழவேண்டும் இந்த

2 தேகவிஷாதிகள் கெடவேண்டும் ஞான
தீபத்தைஎன்னுளத்தில் இடவேண்டும்
பாகஅறப்பயிரை நடவேண்டும் அந்தப்
பயிர்க்குன்அருட்புனலை விடவேண்டும் இந்த

3 மோகப்பசாசுதனை வெலவேண்டும் நல்ல
முத்திநெறியிலே செலவேண்டும்
நாகமெனும்புலனைக் கொலவேண்டும்
நாயனேயின்னமும் சொலவேண்டும் இந்த

---

16. இராகம் - பைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

இந்தப்பிழைகளெல்லாம் பொறுப்பாயே பாச
பந்தக்கணைகளை வேரறுப்பாயே இந்த

அநுபல்லவி.

சொந்தப்பிள்ளைகளான தூயவர்க்குப்பிதாவே
அந்தப்பரமசுகம் அளிக்குங்கனதாதாவே இந்த

சரணங்கள்.

1 ஆதியானபரஞ்சோதி உன்னைநான்வெறுத்தேன்
என் மனந்தனை
ஆகமாதிகள்சொல் யோகசாதனையில்கிறுத்தேன்
அநுதினமும்
வேதம்வேதியர்கள் ஓதுநீதியையுமறுத்தேன்
சமர்த்தன்போல
விம்புபேசிப்பெரும்பாம்புபோல விடம்பொறுத்தேன்
சதாகாலமும்

பூதவாழ்வினை நாடினேன்-மறு
மாதர்கள்சுகந்தனை தேடினேன்-பஞ்ச
பாதகரோடும் உறவாடினேன்-தன
காதகனென்றுபெயர் சூடினேன்
ஆதுலர்க்கிரங்குதியாமலே தடித்தேன்
சாதுஜனங்களைக்கண்டே கடியெடுத்தேன் இந்த

2 நேயமான தந்தைதாயைச் சற்குருவைப்பழித்தேன்
ஜெபதபத்தை
நித்தியதர்மங்களைப் பத்திமார்க்கங்களைஒழித்தேன்
கைப்பொருளெல்லாம்
காயமோசுகமாயவாழ்விற் செலவழித்தேன்
உனைத்தொழாமல்
காட்டில்வாழ்மிருக கூட்டம்போலநாள்கழித்தேன்
அநுதினமும்

தூயரைக்குறைசொல்லித் தூற்றினேன்-பெரும்
தீயரைத்தினந்தினம் போற்றினேன்-நல்ல
ஞாயவழக்குகளை மாற்றினேன்-பதி
ணாயிரம்பொய்சொல்லத் தோற்றினேன்
வாயில்வந்தபடி வம்புகள்தொடுத்தேன்
கோயில்மணியமெனக் குடிகளைக்கெடுத்தேன் இந்த

2 பூமியிலேபெரியபாவிஎன்று பேரெடுத்தேன்
புரட்டுருட்டும்
பொய்யும்வஞ்சனையும்செய்யும் மார்க்கந்தனையடுத்தேன்
உன்றுமந்தனை
நாவிலே எனதுபாவிலே சொலாமல் விடுத்தேன்
ஞானியைப்போல
நாட்டில்மய வேஷங்காட்டி உன்னை நான்கெடுத்தேன்
அநுதினமும்

பாவமும்பழிகளுந் தாங்கினேன் பெருக
கோவமுங்குரோதமும் ஓங்கினேன் புண்ணிய
ஜீவனஞ்செய்யாமலே தூங்கினேன்-நல்ல
பாவம்செய்யும்வழி நீங்கினேன்
ஆவலாகபிறர்பொருள் அபகரித்தேன்
காவலாநெறியைக்கடந்து சஞ்சரித்தேன் இந்த

4 வாரங்கூலிகளிற் சோரஞ்செய்து நான்குறைத்தேன்
பிறரிடத்தில்
வாங்கியபொருள்களை ஈங்கிலையென்றுநான்மறைத்தேன்
பஞ்சத்திலே வியா
பாரஞ்செய்யப்பலசேரில் நெல்லைகட்டிநிறைத்தேன்
நல்லதண்ணீரைப்
பாழிலேசகலநாழிகையும் விழலுக்கிறைத்தேன்
முதலினோடு
நேரவட்டிதனைக் கூட்டினேன் வெகு
தூரம்அகிலையை நீட்டினேன் வெகு
கோரஞ்சொல்லிச்சண்டை மூட்டினேன் உப
சாரஞ்செய்தோர்க்குக்கத்தி தீட்டினேன்
தாரம்பிள்ளைகளுக்குந் தான்செய்வேன்வஞ்சம்
நேரில்வேதநாயகா நின்னடிதஞ்சம் இந்த

---

17. இராகம்-சுருட்டி-திசிரஜாதி, ரூபகம்.

பல்லவி.

தேவாதி தேவனே தயைசெய் தருள்வாயே

அநுபல்லவி.

பாவவுடலம் எடுத்துநீளும்
பாதகனும்என்னை நாளும்
பந்தப்பகை சாடாமல்
சிந்தைத்துயர் கூடாமல்
நிந்தைப்பழி மூடாமல்
இந்தப்படி வாடாமல் தேவாதி

சரணங்கள்.

கற்பகோடிகாலம்போல அற்பவாழ்வினைமதித்தேன்
சாரணமாக எந்நேரமும் அகங்காரம்நெஞ்சினிற்பதித்தேன்
தற்பராஉன்பொற்பாதம்புயந் தாழ்ந்திடாதெனைத்துதித்தேன்
சாந்தமாய்யோகாந்தமார்க்கஞ் சார்ந்திடாமற்குதித்தேன்

நற்பதஞ் சார்ந்தாளு கனைந்து
நாசவினைகள் யாவுந்தீர்ந்து
ஞானந்தனிலே நீட
மோனந்தனையே தேட
வானந்தனையே தேட
ஆனந்தமுமே கூட தேவாதி

2 பாசவாம்பிசாசம்என் மனம்வாசஞ்செய்வது நிலையே
பாபமுங்கடுங்கோபமும் பலர்சாபமும் பெருமலையே
நேசமும் விசுவாசமும் பிரகாசமும் எனக்கிலையே
நிந்தையா அகந்தைதமூடும் என்சிந்தையுங் கடுஞ்சிலையே
ஈசனே என்பாவம் நீக்கி
என்னையே உன் தாசனாக்கி
இன்பக்கடலே சேரத்
துன்பக்கடலே பேர
அன்பர்க்கினமே சார
என்பொய்குணமேதீர தேவாதி

3 அன்பர்களிக்கஇன்பம் அளிக்கும்ஆனந்தப்பெருமாதியே
அனவரதமுங்கனவிரதர்கள் அகத்தில்ஒளிருமதியே
துன்பசாகரஎன்பதுகெடத் தோன்றிடும்பரகதியே
தொண்டன்வேதநாயகன் மனப்பெண்டகமகிழ்பதியே
நின்பதந்தனை நாளும்ஏத்தி
நேசமாய்க் கவிசாலசாத்தி
நீதிப்பயனைவிள்ள
ஆதிப்பழியே தள்ள
வேதப் பயனைகொள்ள
போதத் தினிலேதுள்ள தேவாதி

---

18. இராகம்-பியாகு, ரூபகதாளம்.

பல்லவி.

இந்த நிமிஷமே பாபநிவர்த்தி
எனக்கருள்வாய் ஸ்வாமி இந்த

அநுபல்லவி.

எந்த நிமிஷத்தில் சாவுவருமோவென்
றேங்கியே நான்பயந்தேனே உயிர்
நீங்கிடிலென்னசெய்வேனே சுரர்கோனே இந்த

சரணங்கள்.

1 காலையோ மாலையோ நாளையோ சாடுவனுங்
காலக்கணகறியேனே வந்த
வேலைமுடியுமுன் ஓலையனுப்பிட
வேண்டாஞ்சொன்னேன் சிறியேனே என்னை
ஆண்டாலுனைப்பிரியேனே பெரியோனே இந்த

2 பொட்டென்றுதேகந்தான் சட்டென்றுவீழ்ந்திடில்
இட்டஒருவர் நில்லாரே குழி
வெட்டென்பர் பிரேதத்தைக் கட்டென்பர் மண்ணைமேற்
கொட்டென்பர் போவர்பொல்லாரே ஆன்ம
நஷ்டம்வராமற் காண்பாரே துயர்தீர இந்த

3 கப்பல்இல்லாமலே எப்படியேனுங்
கடலைகடக்கவொண்ணுதே நாளும்
அப்படிநின்பதத் தெப்பமில்லார்க்கந்த
ஆனந்தவீடுகண்ணுதே நல்ல
ஞானந்தருவாயிப்போதே கைவிடாதே இந்த

4 ஆதிமத்தியாந்தர கிதப்பிரபோதே
அபேதபுராதன நாதா நாளும்
காதலுடன்வேத நாயகனுள்ளக்
கமலந்தங்குந் திருப்பாதா எனக்
கமலந்தர இன்னம்வா தா கிடையாதா இந்த

---

19. இராகம்-கல்யாணி, அடதாள சாப்பு.

பல்லவி.

இந்த உபகார மறவேனே பூமி
அந்தரம் எங்கும் நிறைகோனே இந்த

அநுபல்லவி.

விந்தைநராஜன்மம்நான் மேலஅருள்நோக்கினுய்
தந்தைதாயமனைசேயர் தந்துகுறைநீக்கினுய் இந்த

சரணங்கள்.

1 குருதியாகியசேறு கூட்டி நல்ல
கொழுமாமிச்சுவனர் நாட்டி
வரிஎன்புவிடங்கள் பூட்டி கட்டும்
நரம்புகளை மாட்டி

இருகாலில் நவவாசல் உடல்மனையைவீக்கினாய்
இன்பங்கள்நுகர ஐந்திரியம் ஆக்கினாய்
அரியஆன் மாவில்நல் லறிவினைத்தேக்கினாய் இந்த

2 பூமியாகிய விடமத்தாய் பஞ்ச
பூதாதிஉனுயிர் சமைத்தாய்
மாமதுரவுணவுகள் கொடுத்தாய் அந்த
வானமாம்பந்தலும் எடுத்தாய்
சோமசூரியதாரகா தீபன்ஏற்றினாய்
சகவாயுவாய்உஷ்ண சோகத்தைமாற்றினாய்
சேமஉணவாக்கவே தேசிவினை ஆற்றினாய்
சீதக்கடல்கொண்டு தண்ணீரைஊற்றினாய் இந்த

3 கடலாறுகுளம் ஓடைதந்தாய் மலர்க்
காவுகளும் உதவினையெய்தாய்
தடமலைதருக்களும் வகுத்தாய் வனம்
சார்மிருகபக்ஷிகள் பகுத்தாய்
திடமானநவமணி உலோகாதிநீட்டினாய்
ஜெகஜோதியாகவே சிங்காரம்காட்டினாய்
அடமன்றிநாளு விநோதங்கள் நாட்டினாய்
ஐம்புலாதிகளுக்கும் இன்பங்கள் ஊட்டினாய்

4 சிலபறவை கானஇசை பாடும்வேறு
சிலபறவை திருநடனம் ஆடும்
பலமிருகம்நார்வேலை புரியும்நல்ல
பசுவாதிபாலினைச் சொரியும்
மலர்கனிகள் காய்நிழலை மரமெலாம் நீட்டுமே
மண்ணன்னம் விளைவித்து வயிறாரஊட்டுமே
சலதாரமுமெங்களைத் தலைமுழுக்காட்டுமே
சர்வபொருள்களும் நல்லசந்தோஷம் மூட்டுமே இந்த

5 பித்தர்க்கு நீசெய்யா நரகமேவளம்
பெரிதேனினுமீதற்ப சுகமே
சுத்தர்க்குநீசெய்பே ரகமே பரம
சுகமெனவிரும்புமென் அகமே

பத்தர் அனுகூலாப் பரமகாருண்ணியனே
பகிரண்டகோடிகள் பரித்திடுந்திண்ணியனே
வித்தகசொரூபமேவுநற் புண்ணியனே
வேதநாயகன்உள்ள மீதுவளர்கண்ணியனே இந்த

20. இராகம்-கேதாரகௌளம், ஆதிதாளம்.

பல்லவி.

சிந்தைக்குள் உறைந்தும்நீ சிந்தைதுயரந்தனைத்
தெரியாதோ ஸ்வாமி சிந்தை

அநுபல்லவி.

அந்தரம்புவியெங்கும் அரசாக்ஷியளிப்போனே
எந்தப்பொருளின்உள்ளும் இருந்தகங்களிப்போனே

சரணங்கள்.

1 பாலையும்விஷம்ஆக்கும் பாம்புபோல்கொடுமனம்
பலசுகத்தையுந்துன்பம் ஆக்குமே
பூலோகமெல்லாம்வச மாயினுவேறொரு
புவனத்தையும் பிடிக்கக்கோருமே
காலமுழுதும்இந்தக் கருத்தேயா தனுரூபம்
கலியாணவீட்டிலும் கட்டிக்கொண்டழும்சோபம்
மேலவனேஎனக்கு வாய்த்ததென்பாபம்
வேதநாயகனே பாராயோஎன்பரிதாபம் சிந்தை

2 இருதலைகொள்ளிநடுவிருக்கும் எறும்புபோல
எந்நாளுந்தொலையோ விகாரமே
ஒருசாணுகிய உதரகுழிஅடைக்க
உலகில்படுங்கஷ்டம் அபாரமே
தரணியின்வாழ்வென்பது தானேவிஷவிருக்ஷம்
சார்வதாஇதில்வரும் சங்கடம்கோடிலக்ஷம்
தருபயோகாந்தனிலே சார்தல்உத்தமபக்ஷம்
சார்வாநுகூலா உனக்கெல்லாம்பிரத்தியக்ஷம் சிந்தை

3 போர்கள்நடுவிலே குடியிருப்பதுபோல
புலர்சத்துருக்களின்போ ராட்டமே
சேர்க்குந்தசைவடுவாந் தேகமிதுபிணியுந
றீவினைகளுமவளர் தோட்டமே

பார்க்குள்இதுவே ஆபாசநடனசாலை
பகலும்இரவும் இதுபடியுமேமோகவேலை
தீர்க்கவைத்தியர்க்குத்தினமும் கொடுக்கும்வேலை
தினமும்வேதநாயகா சேர்ந்தேன்உன் திருக்காலை சிந்தை

---

21 இராகம் - யமுனாகல்யாணி, ரூபகதாளம்.

பல்லவி.

சரணம்சரணம் நாதா உன்
சரணம்தா ஒன்னாதா

அநுபல்லவி.

திரணமாகிய காயமே இதில்
தினம்அனந்தம் அபாயமே
மரணம்வரும் முன்னே யமபெற
மகிழ்ந்தருளசகாயமே கோடி சரண

சரணங்கள்.

1 பாவியேன்இருதயமே பல
பாதங்களின் மயமே
மேவிடுந்துர்விஷயமே விலை
விலக்கிஅருள்நன் னயமே
மாவினைகளை மாற்றுவாய் எதிர்
வநதென்சிந்தையில் தோற்றுவாய்
சேவைதந்தெனைத் தேற்றுவாய்-இந்தத
தீயனைக்கரை யேற்றுவாய் சரண

2 மதம்இராகதுவேஷம் பொய்
வஞ்சகம்பல தோஷம்
எதிலும்நான் விசேஷம்-எனக்
கில்லைபுண்ணிய சேஷம்
மதனப்பேயை ஒட்டுவாய் நல்ல
மார்க்கத்திலெனைக் கூட்டுவாய்
விதனரகைப் பூட்டுவாய்-உன்
வீட்டுக்குவழி காட்டுவாய் சரண

3 தாசர்கள்பரிபாலா கன
சாத்விககுண சீலா
நீசர்கள்பிரதி கூலா சத்ய
நீதியுறுசெங் கோலா
ஆசறுமுதல் நடுவே அகி
லாண்டகோடி சாலனே
நாசரகித மூலமென வேத
நாயகன் அநுகூலனே சரண

22. இராகம் - கற்கடா, ஆதிதாளம்.

பல்லவி.

சிலம்நீதா தேவநாதா
சிறியன்மீது வாதா ஆவேதா சிலம்

அநுபல்லவி.

மூலகாரண தயாபரவேதா
மோக்ஷசாம்பிராச் சியப்பிரதாதா சிலம்

சரணங்கள்.

1 நன்மைதின்மைஇன்ன தென்பதுதெரியேன்
ஞானமார்க்கந்தனை யேயநுசரியேன்
சின்மயானந்தனே ஜெபப்புரியேன்
தீயனனான் பாபத்திற்பெரியேன் சிலம்

2 தாயிருக்கப்பிள்ளை தங்குதல் சரியோ
சாமிநீ என்மனம் வாழவும் வரியோ
நீயிருக்க என்தன் துன்பம்உபரியோ
நீயேதாமசிக்க என்னுடல்கிரியோ சிலம்

3 ஜீவசிட்டிஸ்திதி லய அதிகார
ஜென்மசாபல்லியப் பிரதான உதாரா
தேவதேவதன பூசித்திரா
சிறியன்வேதநா யகன்உபகாரா சிலம்

23. இராகம் - உசேனி, ஆதிதாளம்.

பல்லவி.

நின்பதமே துணை ஐயா மனத்
துன்பம் அகல் அருள் செய்வாய்

அநுபல்லவி.

இன்பமகோததியே இனியதயாநிதியே
அன்பர்ப்ரகதியே அமரர்க்கதிபதியே நின்

சரணங்கள்.

1 என்மனம் இளகாத பொருப்பேமாயை
என்றைக்கும் அதிற் குடியிருப்பே
தன்மனமே அதற்கருவருப்பே கெட்ட
தாமசகுணமென்றால் விருப்பே
நன்மைகெடுக்கும் இசை நாசக்கொருநெருப்பே
தின்மையெயல்லாம் அகலத் திருவருட்கண் திருப்பே நின்

2 ஐந்தும் அறியேன் ஞான சாஸ்திரம்புவ
னேசா உனக்குநாம் எம்மாத்திரம்
சோதனைக்கெளியேன் அபாத்திரம் அதி
தூயனே என் இன்னம் நக்ஷத்திரம்
வேதனைமிகக்கொண்டு மெலிவுற்றேன் அகோராத்திரம்
சாதகமுறவே நீ தருவாய் மெய்ஞ்ஞான நேத்திரம் நின்

3 நீசனுன் வினைக்கெல்லா மூலம் எந்தன்
நெஞ்சம் செய்வதும் பிரதிகூலம்
பாசபந்த உலகஜாலம் தன்னில்
ஈசனே கேளாயோ ஏழைநாடும் ஓலம்
தாசன் வேதநாயகன் தனக்கு நீ அருள் சீலம் நின்

24. இராகம் - முகாரி, ஆதிதாளம்.

பல்லவி.

ஆள்வாயெனதுள மூள்வாயெனக்குள் தன்
அடியிணையே துணையே ஆள்

அநுபல்லவி.

நீள்சுககனியனே நேசருக்கினியனே
நாள்வளர் தனியனே நயமறைத்தொனியனே ஆள்

சரணங்கள்.

1 பேதைநான்பயனில்லாப் பேச்சிகண்டப்பிரசண்ட
பிறரைமயக்குவதிற் பெரியஉற்பாதபிண்டம்
வேதவினைஎனக்கு விளைசருக்கரைகண்டம்
விரைந்தருள் புரிஉனக் காயிரங்கோடி தண்டம்
வேதனே வரப்பிர சாதனே ஆசிர்
வாதனே சுரர்புகழ்கொள் காதனே நாதனே என் ஆள்

2 மனமெனுங்குரங்குக் கனஅறமேஉபேக்ஷை
வாதனைநீக்கிடாமல் ஏதின்னமும்பரீக்ஷை
தினகரரூபனே திவ்வியமெய்ஞ்ஞானதீக்ஷை
திடமுடன்கொடுத்தருள் அதுவேஎனதபேக்ஷை
தேவனே மனோ பாவனே மறைசொல்
நாவனே தயைநின்ற சுபாவனே ஜீவனே எனை ஆள்

3 நிகரில்கனதெய்வீக நின்மலசுலக்ஷண
நித்தியம்நினையும்பக்தர் நெஞ்சப்பிரதக்ஷண
சகலஜீவாத்மகோடி தாங்கும்சம்ரக்ஷண
சாஸ்திரம்வகலுமசுரர் ஸ்தோத்திராமிர்தபக்ஷண
தாங்குவாய்நெஞ்சில் ஓங்குவாய்துயரம்
நீங்கவேவேதநாயகன் பாங்காநின்றனுதினம் ஆள்

---

25. இராகம்-ஆரபி, அதிதாளம்.

பல்லவி.

வேதநாயகனே என்மீதிலுன்
திருவுளம் இரங்குவையே வேத

அநுபல்லவி.

ஜீவன்முக்தியூர்ஜித சீலாபிதுராஜித
தாவில்அதிபூஜித ர்வசமயயோசித வேத

சரணங்கள்.

1 கரதலாமலகம்போல்உனக்கு யாவுக்திர்ஷ்டாந்தம்
கர்த்தனே அறியாயோநீ எனதுவிர்த்தாந்தம்
பரவும்பதங்களென்றால் பாலருக்கும்ஆனந்தம்
பலபதங்கேட்டுந்தயைபண்ணுவேதோசித்தாந்தம்
பற்பலநற்ப உற்பவிற்பன
கற்பனைசெப்பரும் அற்புதஉற்பன வேத

4 தனமிகவேண்டுவோர்க்குச் சல்லியோடுதானமோ
தானமுள்ளோர்க்குக்கானல் ஜலமதுபானமோ
கனசுகந்தேடெனக்குக் கவலைசன்மானமோ
கதிபருள்வாயுனக் கதுபராதீனமோ
காத்த சமர்த்த பிரசித்த சம்வர்த்தன
பக்தர்கள் சுத்த அகத்துறு நிர்த்தன வேத

5 தினமும் அனந்தபாவஞ் செய்வதென்சம்பிரதாயம்
சிந்தைக்கறங்கசப்புமா வேப்பிலைக்கஷாயம்
இனவேதநாயகனென் றெற்றேன்உன்னாமதேயம்
உனக்கெல்லாவிடினும் அப்பெயர்க்கெனுஞ்செய்சகாயம்
எம்பர உம்பரும் அன்பரும் நம்பிய
அப்சர சம்பிரம் இன்பம் நிறம்பிய

---

26. இராகம்-அடாணா, ஆதிதாளம்.

பல்லவி.

ஈசாநின்பொற்பாதமலர் நம்பினேன் என்னை
இக்ஷணமேவந்து ரக்ஷணஞ்செய்தருள்

அநுபல்லவி.

தாசர்மனகம லாசனகேசர
சாசுவதயோக சாம்பிரஜ்யகிரகேசுர
ஆசைக்கினிலை அவாங்கனோகோசர
அண்டபிரமாண்ட அகண்டசராசர

சரணங்கள்.

1 எத்தனைபேர் சுகித்தமர்வீட்டில்
எனக்கிடம் பூச்சியமா தயை
சித்தங்கொள்வாய்யெனப் பித்தனெனக்குத்
தினமனோராச்சியமா நல்ல
நித்தனேஇன்ப மிகுத்தமுக்திகலன்
நீதரில்வானவ ரோதுவரோகலன்
சத்தில்வழக்கவர் பேசிஎன்னபலன்
தாயேஉற்றதுணை நீயேபின்வேறிலன்

2 மாகுணபாக லைசயோகமின்றிப்புவி
வாழ்ந்தவர் தாமெவரோ எங்கும்
ஏகும்நெஞ்சனரு காகவாரா திகற்
கேகுறுக்குச்சுவரோ விஷ
நாகமாயையெங்குஞ் சர்வகொள்ளையோ
நான்பயனில்லாமற் பேசிடுங்கிள்ளையோ
ஆகினுமென்புத்தி தான்சுத்தவெள்ளையோ
ஐயனேநானென் தாயில்லாப்பிள்ளையோ ஈசா

3 வந்துன் தரிசனந் தந்தருளிலென்
மனக்குறை தீரேனோ உன்தன்
சுந்தரபாதமென் சிந்தனையூன்றிற்
சுமக்கடல் சாரேனோ பெரும்
பந்தநெருப்புக்கென் சிந்தனைசெய்தையா
பாவியென்றனைக்கை நீவிடல்சத்தையா
விந்தைகலந்தந் திடல்பெருவித்தையா
வேதநாயகன் பங்கென்னசொத்தையா ஈசா

---

27. இராகம்-துசாவந்தி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதியேபரஞ்சோதியே எனை
ஆதரித்தருள்வாயே ஆதியே

அநுபல்லவி.

ஓதிஉணர்ஒண்ணு தோங்குங்குணாகர
நீதிவடிவமுறு நின்மலசாகர ஆதியே

சரணங்கள்.

1. உலககாரியத்தில் நான்வெகுதிராணி உன்னை
உண்ணுவதிற்கேவலம் அப்பிராணி
நலம்என்பதெனக் குண்டாமோ நாணி எந்தன்
நவைவற்றப்போதுமோ ஆயிரந்தோணி
மலவசமாகிச் சோர்ந்தேன்
தலைவாஉன்னடி சார்ந்தேன்
மதிக்கும்அடியார்கள் துதிக்கும்ஆரிய
கதிக்குநானென் உதிக்கும்வீரிய ஆதியே

2 கண்ணுள்ளபோதல்லவோ கண்காட்சி சீவன்
கழியுமுன்னல்லவோ புண்ணியமாட்சி
மண்ணில்எனக்குஞான அரசாட்சிமிக
வாய்க்கும்படி ஐயனேகேட்டாட்சி
எண்ணரிய பிரதாபா
கண்ணரும் சுப்பிரதீபா
இணங்கும் அமரர்கள் வணங்குபெருவர
மணங்குலவு சுருணங்கொள் குருபர ஆதியே

3 செய்கைகளே மனுஷகுலகர்மமே
ஓதிவிட்டேன்உனக் கென்உள்ளமர்மமே
ஓவோ ஐயனே இன்னம்ஏன்வர்மமே
பாதகமலம்அணி வேதநாயகன்பணி
படர்ந்ததிருவருள் அடர்ந்திடும்பிரம ஆதியே

---

28. இராகம்-கேதாரம்-ஏகதாளம்.

பல்லவி.

தேவனேஉன்னை நம்பினேன்
அடியேனை ஆண்டருள் தேவனே

அநுபல்லவி.

தேவா துரித அபாவா சுகுண சுபாவா
மகாநு பாவா வாவா தேவனே

சரணங்கள்.

1 ஐயாகிலே அறு பொய்யாம்உலகினில்
நையாவகை அருள் செய்யாயோஉயிர் தேவனே
2 வாராயோமுகம் பாராயோ அருள்
கூராயோவினை தீராயோகன தேவனே
3 பெரியாய்கைவிடல் சரியாநான்வினை
புரியாவிதஅருள் சொரியாயோஉயர் தேவனே
தீதுபொறுத்தல் தெய்வகுல தர்மமே தீய

4 கொங்கேதன்வினைசுட வங்கேதன்உனதிடம்
வங்கேதன்சுகமில்ல தங்கேத அருள்புரி தேவனே

5 நாதா அருள்ஒண்ணுதாமனம் இரங்
காதா அநுதினம் வேதநாயகம்பணி தேவனே

---

29. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

பரனே அடியர்மனோ காரனேநிமலதின
கரனேநீ அருள்வரனே

அநுபல்லவி.

உரனேமிகும்புன தரனேசுஅண்டசரா
சரனேபரமசுக கரனேதீரனேஅரும் பரனே

சரணங்கள்.

1 என்னைவந்திரக்கும் ஏழைதன்னைநான் தள்ளிவிடில்
ஈசனேகோபம்பண்ணுயோ தந்தை
அன்னையேஉனையிரக்கும் என்னைநீதள்ளில்எனக்கும
அவ்விதமென்றே எண்ணுயோ
முன்னைநீஅனேகரைஉன் பொன்னடியிற்சேர்த்தனை
இன்னமும்பலபேர்தமைப்பின்னும் வினைதீர்த்தனை
என்னவேநான்கேட்டுன்மீது சொன்னேன்பலகீர்த்தனை
பின்னையொன்றும்வேண்டேன் அருள்உன்னையிதேபிரார்த்தனை

2 உத்தமனேநான்பெரிய பித்தனுயினும்எனை
அடுத்தவனேஉன்னுயோ பாரில்
சித்தமிசைவைத்தியமிகுந்த பாலகனைக்கை
விடுத்தகலுவாள் தாயோ
முத்தொழிலில்முதல்தொழில் கொண்டுசெய்தாயென்சடம்
முத்தஞானம்அளித்தெனைக் காத்தருளாயேன்அடம்
அத்தனே அவ்விரண்டாந்தொழிலில் என்னசங்கடம்
அதுதரல்மூன்றாந்தொழிற் கஞ்சிடேன்இதுதிடம்பரனே

3 பாடுசவியிற்பனை தேடுவதல்லால்உன்னருள்
கூடுவகைகுறியேனே என்னை
காடுளவரோடுமேவாதாடுவதல்லால் என்வாயை
மூடும்வகை அறியேனே
வாடுதலில்பாதமலர் சூடுபெரியோரக
வாசபுவனேசவளர் பாசவினைமாரக
வீடுதவிதியாக அலையாடுகடற்பாரக
மீதுவேதநாயகன் எப்பொழுதுமேகொள்தாரக பரனே

---

30. இராகம்-தியாகடை-திரிபுடைதாளம்.

பல்லவி.

அம்புயப்பதம்நம்பினேன்ஐயா பரலோகசாதம்
சம்பிரமத்தைவிரும்பினேன் மெய்யா
கனதியாகசையா அம்புய

அநுபல்லவி.

தம்பமாம்அவலம்பம்வேறிலையே தேவாதிதேவர்கள்
சகிதமாகியசுகிதம் ாமனையே மெய்ப்போதகிலையே அம்புய

சரணங்கள்.

1 தினமும்அலையுமென்மனமே சேசகமாஅடியேனும்பால்இஷ்ட
சத்திவேண்டியே நித்தியம்யாசகமா
கனஅதீதனென்மீத்ரோசகமா·உன்சொல்உன்சாதுக்குக்
கடினமாகிய கொடியவாசகமா
நான்ஒரு மசகமா அம்புய

2 மண்ணின்வாழ்கையில் எண்ணில்வாதனையே-அதுநீக்கவேயருள்
மன்னிடாமலேன் இன்னஞ்சோதனையே
திண்ணியம்பெறுபுண்ணியவாதனையே-அடியேனுக்கேஸ்வய
தீனமாகச்செய் ஞானபோதனையே
செய்தே னவந்தனையே அம்புய

3 எண்ணிமகிழ்ந்திடு விண்ணியவிக்கிர பரிசுத்தசீவர்கள்
இஷ்டபிரணதுஷ்டநிக்கிரகமே
விண்ணிஞேதினம் நண்ணுசுகக்கிரகமே இனிநீபுரிந்தருள்
வேதநாயகன் தனக்கனுகிரகமே
பணியார் உக்கிரகமே அம்புய

---

31. இராகம் ஆஹிரி திரிபுடைதாளம்.

பல்லவி.

சம்மதிஎனக்கு மெய்யனே-உனைநிக
நன்மதிதந்திடல் ஐயனே

அநுபல்லவி.

அம்மாவென்றழ மேன்மேலும்
வெம்மனநோயோ சூழ்ந்தாலும் சம்மதி

சரணங்கள்.

1 தன்னைஉன்னவே கூடாதென்றே-தடைசெய்வோன்தான்
இன்றிலத்துண்டோ குணக்குன்றே
நின்னையே தொழுவிரதம்
நேர்துணை அங்விரதம்
உன்னவே என்மனோரதம்
உதவுவாய் கருணாமிர்தம்
ஓங்கிவளர் தனம் நீங்கியொழியினும்
வீங்கியுடல்பிணி தாங்கியழியினும் சம்மதி

2 பதமலர்மேல் ஆசைகொண்டேன் உலகவாழ்வு
சதமலவெற்றுண்மை கண்டேனே
நிதமுனைப் பணியுமதி
நீதரஇலை யோவிதி
அதிற்குறையுமோ உன்னிதி
அண்டினேனுனுன் சன்னிதி
அடரும்வறுமையோ டிடர்கள்சூழினும்
படருபனந்துயர்க் கடலில்ஆழினும் சம்மதி

4 உத்தமபிரசைதஅனியமே சௌஜஅனியமேமெய்ப்
பத்தர்கள் அல்லா தாக்க அனியமே
சுத்தமதுர பாஷணா
சோபனகுண பூஷணா
வித்தககவி சேஷணா
வேதநாயகன் போஷணா
விலகியேஎனை உலகம்நகைக்கினும்
கலகமாகவே பலர்கள் பகைக்கினும் சம்மதி

32. இராகம் - கேதாரம், ஆதிதாளம்.

பல்லவி

ஐயனே உயர் மெய்யனே

அநுபல்லவி.

உய்யவே அருள்புரி செய்ய பதந்தந்தேனை ஐயனே

சரணங்கள்.

1 ஈசனேநான் ஆத்ம இரக்ஷண்ணியமே
இரங்கியருள்கடாக்ஷ வீக்ஷண்ணியமே
தாசன்நானுனக்கென்னுந் தாக்ஷண்ணியமேகொண்டு
தந்தருள்வாய்விவேக தீக்ஷண்ணியமே ஐயனே

2 இகநிதி அழிந்து போகில்லாது அதை
ஈந்தனம்மோவ மென்றால்செல்லாது
நிகழ்நித்தியசுகந் தந்தால்அல்லாது
நில்லாமல்நச்சும் என்வாய்பொல்லாது ஐயனே

3 கோதையர் மைந்தர்முதற் பரிஜனமேசந்தைக்
கூட்டம்அவர்மேற் கொள்ளுங்கரிசனமே சந்தை
வேதைதரும்இது நிதரிசனமே
வேதநாயகனுக் குன்தரிசனமே ஐயனே

---

33. இராகம் - ஜயந்தஸ்ரீ, ஏகதாளம்.

பல்லவி.

நாதா நிரந்தர விநோதா உன்தன்
பாதார விந்தம்எனக் காதாரம் தாதா நாதா

அநுபல்லவி.

வேதாந்தசார நபபோதா பஞ்ச
பூதாந்தகால விபரீதா விக்கிரயாதா ஜெக நாதா

சரணங்கள்.

1 பேசருஞ்சர்வ பவநேச நல்ல
தாசர்மனு லயவாசா பவராசா ஜெப நாதா

2 மாவரந்தர லாகாதா வினை
போவெனநீசொலிற் போகாதா சாகாதா புவி நாதா

3 மாயையின் சபதமே நிசமா அந்தப்
பேயைக்கொள்வ துனக்கவசமா தாமசமா தெய்வ நாதா

4 அடியன்மனங் கடினஇரும்பா அரும்
கொடியவினை அதற்குக்கரும்பா நானோர் துரும்பா ஜெகநாதா

5 ஆதிமத்திய அந்தரகிதா சுயஞ்
சோதிமய அமரர்சகிதா நணசுகிர்தா மகி நாதா

6 மாயாந்தகாரம் அகில்கிரணு வேத
நாயகன்தொழு மலர்சரணு அந்தக்கரணு தெய்வ நாதா

---

### 34. இராகம்-புன்னாகவராளி, ஆதிதாளம்.

பல்லவி.

காக்கவேண்டும் கடவுளே நீ காக்கவேண்டும்

அநுபல்லவி.

காக்கவேண்டுமெனை அன்பன் ஆக்கவேண்டும் என்கவலை
நீக்கவேண்டும் பாவமெல்லாம் போக்கவேண்டும் தினமெனை

சரணங்கள்.

1 பண்ணியவினையுமனம் எண்ணியவினையும்வாக்கில்
கண்ணியவினையுந்தீரக் கண்ணியவரந்தந்தெனைக் காக்க

2 ஆரணனேநீகொடுத்த தாரணியச்செல்வத்தின்மனம்
பூரணமானேன்பாவநீ வாரணசுகந்தந்தெனைக் காக்க

3 எந்தவேளைமரணமோ அந்தவேளைவந்துன்அர
விந்தமலரேநிகருஞ் சுந்தர அடிதந்தெனைக் காக்க

4 பூதமுதலானஜீவ பேதகாரணனே நாளும்
வேதநாயகன்பணிபிரக் கியாதபூரணனே எனைக் காக்க

35. இராகம்-கேதாரகௌளம்-திரிபுடை தாளம்.

பல்லவி.

ஈசனேமல நாசனேமன வாசனே பிரகாசனே

அநுபல்லவி.

பாசவிருளினை நீக்குவாய் உந்தன்
பதத்துக்கெனவுற வாக்குவாய் ஈசனே

சரணங்கள்.

1 இறியன்மதிவெறும் ஸ்தூலமேஅதன்
செயலெலாம் அலங்கோலமே
குறிகொள்பாச நிர்மூலமேசெய்து
குணந்தந்திட இதுகாலமே
அறியநானிடம் ஓலமேசெவிப்
பொறிகொண்டுத வனுகூலமே ஈசனே

2 அடருங்காமக்கொள் பேழைபேநிகர்
ஆகும்உடலெனும் பாழையே
திடமென்றுன்னும்நாம் ஏழையே குறை
தீரக்கற்றறி லோழையே
தாடுகிலேட்டுமங் கோழையே உயர்ந்
திடுமுன்தொலைபவப் பீழையே ஈசனே

3 என்னைக்கெடுத்திடக் கங்கையே இடை
இருக்குக்கட்டிக் கொண்டிச்சையே
முன்னைவருந்திடக் கொச்சையே கொண்டுன்
முன்வந்திரந்தனன் பிச்சையே
உன்னுமாவாத் தியாகமழைபொழி
பன்னுவேதநாயகன்வெல்லினைமொழி ஈசனே

---

36. இராகம்-ஆனந்தபைரவி-ரூபக தாளம்.

பல்லவி.

நிரந்தரனே மா-துரந்தரவண கன
நிர்மலத்துவ தர்மகர்த்துவ நிரந்தரனே

அநுபல்லவி.

பரந்தபொருள் சுரந்தகாத்தருள்
பரந்தந்தென்னை விரைந்துதீர்த்தருள் நிரந்தரனே

5

சரணங்கள்.

1 சித்தமிரங்கி யெள்ளத்தனை நீதியை
செய்யிற்பிழையேனோ கன
நித்தனே என்பிழை எத்தனையென்னிலும்
நீக்கித்தழையேனோ நல்ல
உத்தமம்என்னிடம் சுத்தசரித்திரம்
ஒன்றோபலவிதம் என் துர்ச்சரிதம்
நித்தம்என்நெஞ்சம் உடுத்தாமல்வஸ்திரம்
நீக்கினனைச்சேர் சௌபாக்கியசமுத்திரம் நிரந்தரனே

2 உதிமதிகதிர் முதலெல்லாஞ்செல்லும்
உன் ஆணைவழியே எந்தன்
மதியொன்றேஅந்த விதியைக்கடந்து
வளர்க்கு மாபழியே இந்தப்
பொதிமதிக்கேன் தனியரசாக்ஷியே
நினிதஞ்செய்குவ துன்பெயர்மாக்ஷியே
புனிதஞ்செய்குவ துன்பெயர்மாக்ஷியே
பதிதனென்பதற் கென்செய்கைசாக்ஷியே
பாவணனீயென ஈவா அத்தாக்ஷியே நிரந்தரனே

3 பாரிருள் நீக்காத சூரியனாலேஅும்
பாருக்கென்னசாரம் ஞான
ஆரியனேஉன்முன் சாரலாமோஎன்
அகத்தில்அந்தகாரம் நாளும்
சாரமில்லாஞ் சமுசாரகோலாகலம்
சாருமெனக்கென்றும் நீ திராவியாகூலம்
வீரனேநீயறிவா னென்பலாபலம்
வேதநாயகனே நீதருவாய்கலம் நிரந்தரனே

---

37. இராகம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

அப்போது னைத்தொழல் அரிதையா உனை
இப்போதேதொழ அருள்செய்வாய்

அநுபல்லவி.

முப்போதும்உனது முதலேசுரர்தொழும்
அப்பாமரணம்உற் றடியேன்உடல்விழும் அப்போ

சரணங்கள்.

1 திடமார்பிற்பாறைபோலே திரண்டுகோழைகள்கட்டும்
சிறிதும்பேசாதவண்ணஞ் சேர்ந்திருக்கிப்பல்கிட்டும்
படர்ஜீவவாயுவெளிப் படஎங்கும்ஓடிமுட்டும்
பாயுதுவெளியெனப் படுமாயைத்தொடைதட்டும்
பலங்கொள்உணர்வது கலங்நிலைகெட
இலங்குடலைஉயிர் விலங்கிவெளிவரும் அப்போ

2 மனைவிச்செய்கடன்காரர் மட்டிவார்த்தைதவிரிப்பார்
வகையெமக்கென்னவென்று மணல்கயிறுத்திரிப்பார்
மனையிற்பொருளையெல்லா மாவலைபோட்டரிப்பார் நெரிப்பார்
வகையொன்றுமின்றே கையால்மணித்தொண்டையை
மணங்குகழல்கற குடங்குசெயலொடு
திடங்கொள்கரணமும் அடங்கிமாளிறும் அப்போ

3 அழுகைக்குரலும்பல முழக்கலமும்நாணுபேதம்
ஆகப்பலபக்கத்தும் அடக்குமேகடனுதம்
விழுகையுரும்உடலின் வேதனையும்பிரமாதம்
வேதநாயகனே அப்போதுணைஉன்னலேதம்
விரிக்கும்இடர்பல தரிக்கும்உடலினை
முரிக்கும்இசிவோடு மரிக்கும்வேளையில் அப்போ

---

28. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

எவ்வகையிலும் நானே நல்வழி பற்றி
உய்வகை யருள்கோனே

அநுபல்லவி.

செல்வழிநிற்போர்மனத் தேன்கள்வளரும்பூவே
பௌமாகப்பேரின்பம் பழுக்குங்கற்பகக்காவே

சரணங்கள்.

1 வழியர்ச்சிடவென்றுலென் குறியகைகளிற்சூலே
வாங்கரீட்டிஞன்உலகும் வானமும்எந்தழலே
பிறர்நோய்செய்யில்எனக்குப் பெருங்கோபாக்கினிச்சுவாலை
பேதைஎன்பிழை எழுதிடவேண்டுங்கோடியோலை எவ்வ

2 நல்லவழிநடக்கவென்றால் இருகாற்குந்தளை
நாலுந்தூர்வழிநடப் பதில்எனக்குண்டோகளை
புல்வினையேன்செவிபாய் ள் நுழையும்வளை
புண்ணியபுடதேசமென்றால் புகஅதில்லைதுளை எவ்

3 உன்னைத்துதிக்கவென்றால் உலகில்உளன்வாய்க்குநோயே
ஊர்வம்புபேசஎனக் குடம்புழுதும்வாயே
மின்னைநிகர்பிரபஞ்ச வேதனைநீக்குவாயே
வேதநாயகனுக்குச் சாதகமானதாயே எவ்

---

39. இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

கதியிதென்முகம் பார்ஐயா
கதிநின்னையன்றி ஆர்ஐயா

அநுபல்லவி.

மதியுள்ளோர்கள் ருசிக்கும்அமுர்த
வாரியே அருள் மாரியே

சரணங்கள்.

1 உனக்கென்னெண்ணம் அந்தரங்கமா
உதவிதான்செய்யிற் பங்கமா
எனக்கிங்ககஷ்ய அங்கமா
இன்னமென்ன ஆடங்கமா
தனக்குநிகரில்லாத ஞானசாகராகுணாகரா கதி

2 அதஞ்செய்யும்வினை கற்கண்டோ
அதைத்தொலைப்பதென் பலங்கொண்டோ
நிதம்நான்செய்வது வீண்தொண்டோ
நீயல்லாற்பதி வேறுண்டோ
பதகமங்கள்பாவும் பத்தர்கள்பாக்கியமே மனோக்கியமே கதி

3 அன்னைக்குபிள்ளைமேற் குரோதமா
அருள்செய்வது பிரமாதமா
வினைக்குநான்முதற் பந்தமா
இலக்கஇன்னம் விவாதமா
இனைக்கும்வேதநாயகன்பணி நீதனே பிரபோதனே கதி

---

40. இராகம்-கமாஸ்-ரூபகதாளம்.

பல்லவி.

ஜாலஞ்செய்வதேதோ ஐயா
சீலம்சயொண்ணுதோ மெய்யா ஜாலம்

அநுபல்லவி.

ஞானமெல்லாந் தாங்குங்கையா
நற்குணமில்லார்க்கு வெய்யா ஜாலம்

சரணங்கள்.

1 பெண்டுபிள்ளையோடினமோ
பேய்சுலரை படர்வனமே
அண்டும்இவரால்தினமே
ஐயையோ நொந்தேன்மனமே ஜாலம்

2 பாழுமனமே மற்கடம்
பண்ணும் அகவிகடம்
ஊழ்வினை தரும்சங்கடம்
ஒழித்துநீயருள்வாய்தினம் ஜாலம்

3 நீதிவழுவாதச்செங்கோலா
நித்தியசங்கீதலோலா
வேதியர்பரவுஞ்சீலா
வேதநாயகன்சேர் கோலா ஜாலம்

---

41. இராகம் சாமா திரிபுடைதாளம்.

பல்லவி.

வேதநாயகனே எவ்விதமும்உன்
பாதமலா அருளே

அநுபல்லவி.

போதநாயகனே பொய்நீங்கிய
புனிதநாயகனே மெய்தாங்கிய வேத

சரணங்கள்,

1 என்னுமனமேதுர்க் குணங்கள்நின்றபாண்டம்
ஏதும்அறிகிலும் ஞானகண்டம்
பண்ணும்பாவங்களே பிரமாண்டம்
பகரும்வார்த்தைகளே அபாண்டம் வேத

2 மண்ணில்அறு தினம்பூதடேதகம்
வளர்ப்பதெனக் ககலாஉத்தியோகம்
புண்ணியஉடல்வளர்த்திடும் வைதீகம்
பூண்டிலேன் அருள்வாய் விவேகம் வேத

3 விதனவிஷதருகி ரகஸ்தாசிரமம்
விரும்புவோர்க்கிதில் விலகிடாச்சிரமம்
நிதங்கொண்டேன் இந்தவாழ்விலேபிரமம்
நீங்கவேதநாயகனே அருள்மகிழன்பம் வேத

---

42. இராகம் காம்போதி ஆதிதாளம்.

பல்லவி.

எனக்குக்காட்டியவீட்டை எனக்குகொடாதிருப்ப
தென்னஞாயம் ஸ்வாமி

அநுபல்லவி.

இனிக்கும்அவ்வீடு செய்தவெதங்கள்நிமித்தமே
என்றுநீசெய்யவில்லையோ வாக்குதத்தமே
உனக்குநான்பிள்ளையென்பதுலகப்பிரசித்தமே
உவந்துகேளாயோ என்பிரபலாசத்தமே எனக்கு

சரணங்கள்.

1 சித்தவிகாரமுறு வார்க்குச்செல்வுலகம்
சிறப்புள்ளதெனில் சேரனே நல்ல
உத்தமர்க்கமைத்தநித்தியானந்தமுத்தினியின்பம்
உணர்வதெப்படிநானே
சுத்தமணிபொன் அங்கேதிருமகள்கூடமே
தொல்லுலகின்பமெல்லாம் துன்பமாபால்சட்டமே
அத்தமியாநித்திய சூரியர் அன்பக்கூட்டமே
அனுதினம்எனக்கா வீட்டினிதநாட்டமே எனக்கு

2 முகமுமாகஉனைத் தரிசிக்கும்பாக்கியத்தை
மொழியநினைக்க ஒண்ணுமே இந்த
இகமிசைமனமொடு புலன்கட்கெட்டாத அந்த
இன்பம்எப்போது நண்ணுமோ

அகமிசை உன்னன்ன ஆனந்தம் பொங்குமே
ஆயிரங்கோடிசூரியர் ஒளிமங்குமே
நிகரறுகீத விநோதங்கள் எங்குமே
நிரதிசயாநந்தம் நிரந்தரம்தங்குமே எனக்கு

3 இகமனைக்கட்டிநார் குடும்பப்பிரதிஷ்டைசெய்த
இனையரும் எந்தாயே நித்திய
சுகமனை தன்னில் பிரவேசிக்கவே நல்ல
சுந்தரம் அருள்வாயே
அகிலலோகப்பிரபஞ்ச நாகசூத்திரனே
அற்புதபரமநித்தி யானந்தக்ஷேத்திரனே
நிகரதுசௌந்தர நிர்மலகாத்திரனே
நிதம்வேதநாயகன்தொழுங் குணபாத்திரனே எனக்கு

---

43. இராகம்-செஞ்சுருட்டி, ஆதிதாளம்.

பல்லவி.

ஐயனே உன் அழகைக்காண
ஆசைநான் கொண்டேனே

அநுபல்லவி.

வையகமீதுபல அழகையும்
வகைவகையா வந்துகாட்டும் ஐயனே

சரணங்கள்.

1 உதயசூரியன் சோமன் தாகை
உன்முன்னே மின்மினியே
நிதிநவமணி யென்னலும்குப்பைகள்
நிருமோஉனை இனியே ஐயனே

2 கனியுந்தேனும் பாலும் சீனியும்
கற்கண்டும் கரும்பும் சிறுமை
இனிஉனது தரிசனத்தின்முன்
இவைகள்யாவும் வெறுமை ஐயனே

3 செழுமையாகி வண்ணமர்கொள்
சிங்கார வனக்காட்சி
அழகின்ஆலய உன்முன்
அதற்கெந்தனையோ தாட்சி ஐயனே

4 அதிசயவுந்தா மயில்குயில்கிளி
யாதிபறவைக் கூட்டம்
வெட்கிபஞ்சுபோ லோட்டம் ஐயனே

5 சத்தஸ்பரிச ரூபகந்தந்
தான்அல்லாத பொருளே
எத்தன்மைஉன் தருவென்றறிய
இன்பக்காட்சி அருளே ஐயனே

6 பதில்நீசெய் பலபொருள்களைப்
பார்க்கபார்க்க வடிவே
அதிசயம்தரும் எந்தன் அற்புத
அழகினுக்குண்டோ முடிவே ஐயனே

7 பிறந்தநாள்முதல் தாயைக்காணுப்
பிள்ளைதனை ஒதடுதனே
சிறந்தவேத நாயகா உன்மேல்
சிந்தையாவும் வைத்தேனே ஐயனே

## 44. இராகம்-மாஞ்சி, ரூபகதாளம்.

பல்லவி.

என்னைநீ ஆளுவாய் ஏகனே யோகனே என்

அநுபல்லவி.

பொன்னை மாதைபூவை எண்ணம்
பூண்டுநான் கெடாத வண்ணம் என்

சரணங்கள்.

1 யாதனுசீரமே யாதுமில்லாசாரமே
வாதபித்தவுகாரமே வாதனைகள் அபாரமே
மலநிவாரண வடிவபூரண
நமஉதாரண ஞானகாரண என்

2 எந்தநாளும் கிலேசமே என்னெஞ்சிற் பிரவேசமே
பந்தனையைநாசமே பண்ணிசெய் வாசமே
பதிதபாவன பரமஜீவன
அதிகசோபன அகிலஸ்தாபன என்

1 அன்னை தந்தை நீ அல்லவோ ஆயிரந்தரஞ் சொல்லவோ
என்னை மாயை கொள்ளவோ எங்குநான் இனிச்சொல்லவோ
ஏதபேததா இனிப, சாதகா
வேத நாயகா விமல தாயகா என்

15. இராகம்-சைந்தவி. திரிபுடை-தாளம்.

பல்லவி.

ஏழைக்கிரங்க வொண்ணாதா இந்த ஏழை

அநுபல்லவி.

ஆழக்கடலுலகை ஆளும் விநோதா ஏழை

சரணங்கள்.

1 சாடும்பிரசண்டக் காற்றாலே திசை
தப்பிய அலைபடும் கப்பலைப்போலே
நாடும்பிரஞ்ச மாலே என்னை
கைவிடுகவாடினே னுன்புவிமேலே ஏழை

2 நீசெய்வதெல்லாம் சகாயம் இங்கே
நிராதரம் என்செய்கையாவும் அனியாயம்
ஈசனே நின்பதேநேய எனக்
கொள்ளவுமில்லை ஏதென்னமாயம் ஏழை

3 அற்பசுகத்துக் குழைத்தேன் பாரில்
அனுதினம் ஆயிரம் பொய்ச்சொல்லிப்பிழைத்தேன்
பற்பலதீவினை இழைத்தேன் துன்பப்
பாரம்பொறாமலே பரிந்துன்னை அழைத்தேன் ஏழை

4 ஆத்மபத்தினி மணவாளா அகி
லாண்டபிரமாண்ட அகண்டகோளா
வான்மகிழ் தீனதயாளா தினம்
மகிழவேதனயன் வணங்குமபொற்றாளா ஏழை

46. இராகம்-தன்யாசி, ஆதிதாளம்.

பல்லவி.

கருணாகரப் பரம்பொருளே அடியேனைக்
கண்பார்த் தருள்வாயே கருணா

அநுபல்லவி.

இருணாசஞ்செயும் இரவிசமான
தெருணாடியதே ஜோமயம் ஆன கருணா

சரணங்கள்.

1 தோன்றினநாள்முதல் சுகுணமொன்றறியேன்
சொர்ப்பனந்தன்னிலுந் துர்க்குணம்பிரியேன்
ஈன்றவனீயென என்றுமேகுறியேன்
என்னசெய்வாயோவென் றேங்கினன்சிறியேன் கருணா

2 தாரணியில்நான்ஒரு தருவென முளைத்தேன்
தமகுணம்யாவுமே யாகையாக்கிளைத்தேன்
கருமமாகியவிஷக் கனிகளை விளைத்தேன்
கண்டனைசெய்வையென் றஞ்சியேகளைத்தேன் கருணா

3 அகிலலோகங்கட் கெல்லாம்நீயதிகாரி
நிச்சயமா என்மனம் நினக்கொருபாரி
அகிலந்தனிலே அந்தமனம் அகங்காரி
அடக்கி ஆளாவிட்டால் அழியாளோநாரி கருணா

4 அழகுக்காலயமான அமிர்தசுந்திரமே
அன்பருக்கருள்மழை பொழியுங்கந்தரமே
பொழுதிடும் வேதநாயகன் சுதந்தரமே
துணைநீஉனை நம்பினேனிரந்தரமே கருணா

---

47. இராகம்-மோகனம், ஆதிதாளம்.

பல்லவி.

ஏனின்னம் தாமதமையா
என்னிடம் வா ஏனின்

அநுபல்லவி.

தானே உமக்குமுத்தித் தலமொன் றுமில்லையோ
வானமுத்தறைவிட்டு வரமனமில்லையோ ஏனின்

சரணங்கள்.

1 சூரியனை தூண்ட அகன்றீரோ அந்தச்
சோமனுக்கொளி தரச்சென்றீரோ
பாரினைப்புரட்டியே நின்றீரோ அதில்
பகல்இரவுண்டாக முயன்றீரோ
காரிலிருந்து கனமழைசொரிந்தீரோ
கர்ப்பத்தில்சிசுக்களையே புரிந்தீரோ
சாரும்பல்லுயிர்க்குயிராய் விரிந்தீரோ
சர்வலோககாரியஞ் செய்தீரோ ஏனின்

2 அண்டகோடிகளைத் தூக்கினீரோ நலம்
ஆகச்சில அண்டம் ஆக்கினீரோ
கண்டகர்உலகை நீக்கினீரோ கடல்
கரையைகடவாமல் தேக்கினீரோ
அண்டும்பல்லுயிர்க்கமு தூட்டுகின்றீரோ
ஐம்பூதங்கட்கும்வேலை காட்டுகின்றீரோ
மண்டுங்கனிக்குச்சுவை கூட்டுகின்றீரோ
மலருக்குப்பலவண்ணந் தீட்டுகின்றீரோ ஏனின்

3 மரஞ்செடிபயிர்கள் நிறைந்தீரோ அவை
வளரவே தண்ணீரை இறைத்தீரோ
சுரர்கள்இசைகேட்டுக் களித்தீரோ நல்ல
தொண்டர்இதயத்தில் ஒளித்தீரோ
பரமகிருபாகர பரவிதகேசரே
பரமதகண்டன் பாபவிநாயகரே
சருவவிநோத சராசரவாசரே
தாசன்வேதநாயகன் தம்பிராணேசரே ஏனின்

---

48. இராகம்-மத்தியாவதி, ரூபகதாளம்.

பல்லவி.

இவ்வளவுதான் ஐயனே அதிகம் அல்ல
இரங்கிநீயருள் மெய்யனே

அநுபல்லவி.

அவனியில்வளரும் மூவாசையைப்பரிகரி
எவ்வளவுமே துன்பம் இல்லாமல ஆதரி
இதயமலர் தரி விதனமதுபுரி
நிதமும்அருள்புரி இதுவே சரிசரி

சரணங்கள்.

1 எனையெங்காளும் நீ நீங்காதே நான்போம்
இடமெங்கும் கூடவாபின் வாங்காதே
வினையனென்றன் மேற்கோபம் வீங்காதே மன
வேதைசுமக்க என்னால் தாங்காதே
நினைவிலும்தீமைநான் நினையாமற்பார்த்திரு
நித்திரைசெய்யும்போதென் பக்கத்தில்காத்திரு
நெடியநிலைபெறு கொடியபிழைபொறு
அடியன்மனமுறு கடியதுயர் அறு இவ்

2 மாயையில்மனம்புக ஒட்டாதே உன
வஞ்சனைக்காளென்று கட்டாதே
ஆயிரம்தண்டம் என்சொல்தட்டாதே உன
தனுக்கிரகமின்றி நலங்கிட்டாதே
நாயேன்விரும்பிய நல்லவரங்கள்கொடு
நரகைஅடைத்துமோக்ஷ நாட்டைத்திறந்துவிடு
நனவுகொடுகொடு சினமும்விடுவிடு
தினமுமகிழ்வொடு கனசுகுணம் இடு இவ்

3 நலமின்றிக்குறையை ஆராயாதே பெரு
நன்மைகள்கொடுப்பதில் ஓயாதே
பலவேலை இட்டென்று காயாதே அற்பப்
பாக்கியம்நான் கேட்கினும் ஈயாதே
புலனில்வேதநாயகன் புகழும்சுகுணசீலா
பூதபவிஷ்யவர்த்தமானமெனுந்திரிகாலா
போதமழைபொழி மாதாமயலழி
பாதகம்தொழி ஏதமறவிழி இவ்

---

49 இராகம்-சாரங்கா, அடதாளசாப்பு.

பல்லவி.

ஆதரித்திட நல்ல தருணம
தையா உனக்கனந்தஞ் சரணம் ஆதரி

அநுபல்லவி.

பாதகநாசனு பரமகிருபாசனு
சாதகமோசனு தாமப்பிரயோசனு ஆதரி

சரணங்கள்.

1 என்பழிமறைப்பதில் யானே தப்பாதாளம்
இதரப்பழிதூற்றலில் என்வாய்பெரியமேளம்
அன்பின்மனப்பேராசை அம்புவியினுமகளம்
அண்டம்வசமானாலும் அடங்காப்பொருள்வேதாளம
ஆட்டிமயல்வலை பூட்டுமெனுதினம்
கோட்டிசெயும்வினை ஓட்டி அடியனை ஆதரி

2 ஓடிஅலையநெஞ்சக் குலகமும்வானும் அற்பம்
உன்னிடம்வாவென்றால் ஒழியாத அசந்தர்ப்பம்
தேடிநற்கருமங்கள் செய்வதுங் கஜகர்ப்பம்
தீவினைசெய்வதே என் சிந்தையின் சங்கற்பம்
திருத்தமுடனேஎன் கருத்துநலமிசைப்
பொருத்தமுறச்செய்து வருந்தத்தொலைத்தெனை ஆதரி

3 என்குறைகாணவென்றால் என்னிருகண்ணும்ஊனம்
இதரர்பிழைகாணக்கண் இரவிகோடிசமானம்
வன்கண்மொழிகளுக்கென் வாயேமுக்கியஸ்தானம்
மதுரச்சொல்பேசுவென்றால் மாறாதீர்க்கமோனம்
வாதமொடுபல பூதகாரண
வேதநாயக நீதனே எனை ஆதரி

---

50. இராகம்-நாதநாமக்கிரியை, திரிபுடை-தாளம்

பல்லவி.

உன்னைநம்பினேன் ஐயனே எனையாதரி

அநுபல்லவி.

உன்னைநம்பியஏழை தன்னைமுகம்பாராமல்
அன்னைபிதாவேநீ கைவிடலாமா
நான் கெடலாமா
துன்பப் படலாமா உன்னை

சரணங்கள்.

1 தனமுமின்னார்கள் புவனமும் உலகவாழ்வின்
கனமும்வேண்டிலன் இதுதேராயோ
தினமும்உனைக்கருது மனமும்உனதுதரி
சனமும்வேண்டினன் அருள்கூராயோ
மருள் தீராயோ
பொருள் தாராயோ உன்னை

2 படிமீதினில்எண்ண முடியாவுதவுகள்
அதுவேனுறச்செய்த பெரியானே
கொடியேன்உனை அரை நொடியாகிலுந்தொழும்
படியே அருள்நலம பிரியானே
தூயர்க்குரியானே
தீயர்க்கரியானே உன்னை

3 அயமேபெருங்கல்லின் மயமேயெனும்இரு
தயமேமெழுகென உருகாதோ
ஸ்வயமேபரமாதி சயமேவேதநாயகன்
நயமேவினைசெல்வம் பருகாதே
துன்புகரு மாதே
இன்புபெரு காதோ உன்னை

51. இராகம்-பந்துவராளி, ரூபகதாளம்.

பல்லவி.

கடைக்கண்ணால் எனைப்பாராய் உனை
தடைக்கலம் வினைத்தீராய் கடை

அநுபல்லவி.

கிடைக்கொண்ணாப் பதநதாராய
படைக்கவே அருள்கூராய் அருட்
கொடைக்குநானெனனவே யவதரித்த
கோலாகலா மூலா அநுகூலா குண சீலாகிதம கடை

சரணங்கள்.

1 வஞ்சகமாயையில் ஆழ்ந்தேன் ஒரு
தஞ்சமென்னுன்னடி தாழ்ந்தேன்
அஞ்சலென்றேளனை ஆதரித்தாளுவாய்
ஐயாமிருபொய்யால்மனம் நையா தருள்மெய்யா ஒரு கடை

2 ஐயனேதீரா வென்பாபம் அருள்
செய்ய உனக்கென்ன லோபம்
வையகமர்திவர் அண்டமளாவினும்
வாசா புவனேசா மறநாசா பிரகாசா ஒரு கடை

3 அஞ்சலெனில்உன் வாய்நோமோ ஏழை
நெஞ்சம் வருந்திடலாமோ
பஞ்சமோகைப்பொருள் கொஞ்சமோபூபரி
பாலா அநுகூலா ஒரு மேலாமுதல் தூலாஒரு கடை
4 இத்தரைமீதினில் நீயே நல்ல
பத்தரைக்காக்க வந்தாயே
சித்தமுவந்தெனை நித்தமும்ஆலெனிர்
தேகாகனயோகா அதிதியாகர் தனியேகாகுளிர் கடை
5 பூதலம்போற்றும் பொற்பாதா அரு
மாதவஞானப் பிரசாதா
வேதநாயகன் பாடுந்தமிழ்க்கருள்
வேதா உயர்நீதா கண தாதாநய போதா உன் கடை

52. இராகம்-அசாவேரி, திரிபுடைதாளம்.

பல்லவி.

பாசத்தால்மனம் வாடினேன் உந்தன்
வாசத்தால்மலர் கூடினேன் பாச

அநுபல்லவி.

நேசத்தோர்கள்கை வல்லியமே உயர்
நிர்மலாதித்த துல்லியமே கன
மாசற்றோங்கும் பிரபல்லியமே ஜெகம்
மகிழும்பக்தவாற் சல்லியமேமல பாச

சரணங்கள்.

1 நினைவிலேன் பிழையாவுமே என்ன
நினைக்குந்தானென்ன சாத்தியமா
எனைவருத்தும் இந்திரியப்பேய்தனக்
கித்தனை ஆகாத்தியமா
வினை எனக்கு விரோதியா என்றும்
விலகிடாக்கர்ம வியாதியொடு
மனமுமேபிரதி வாதியா கெட்ட
மாயைஎன்ன தாயாதியா பாச

2 இருதலைக்கொள்ளி எறும்புபோலெனக்
கிடைவிடாமன வாட்டமா
மருவும்பந்தப்பசாசு தன்னோடு
மாறிடாதபோ ராட்டமே
மருமமாய விகாரமே செய்யும்
கலகஜாலம் விஸ்தாரமே நல்ல
தருமம்எனக்குத் தூரமேயின்னும்
தப்புக்கள்கப்பற் பாரவே ஐயா பாச

3 வளர்கல்லியாதுத்தில் தாலிபூட்டிட
மறக்குமூடர்கள் போலவே
தளர்பிரபஞ்சவி யாபாரத்தால் உன்தன்
தாள்மறந்தனன் சாலவே
உள்வியாதிக்கா ரோக்கியமே நிதம்
உண்ணுவோர்கள் மனோக்கியமே
வினையுமாமறை வாக்கியமேதொழும்
வேதநாயகன் பாக்கியமே பந்த பாச

---

53. இராகம்-கன்னடகௌளம், ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபரமநாதா ஞானஜோதிதா ஒண்ணுதா

அநுபல்லவி.

பூதலம்பரவும் விநோதனே கன
அதிதமாயஇருள் பேதமாகவே ஆதி

சரணங்கள்.

1 காமக்குரோதமதம் லோபம் அகங்
காரம்பொய்மாற்சரியங் கோபம் இன்னும்
பூமியிற்பலபலபாபம் செய்யும்
பல்லன்மனம் அநித்தியாரூபம் நல்ல ஆதி

2 பெண்டுபிள்ளைகள் சமுசாரம் முதற்
பேசும்லௌகீக வியாபாரம் தன்னில்
மாண்டுமேமோகாந்த காரம் தூய
மாற்றியருள்வை நிர்விகாரம் நல்ல ஆதி

3 பாவக்கடல்கடக்குங் கமலமேதொண்டப்
பயிர்கள்வருந்தெய்வ நீலமேகன்
நாவலர்போற்றிடும் சீர் லமேவேத
நாயகாநாணுன் அடைக்கலமேநல்ல ஆதி

54. இராகம்-காகாப்பிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தவரந்தருவாய் எனக்
கெந்தவரங்களு மில்லையென்றாலும் இந்த

அநுபல்லவி.

சுந்தரமாகத் துலங்குந்தெய்வீகனே
சந்ததமும்புவி தாங்கும்நிர்வாகனே இந்த

சரணங்கள்.

1 காயநிமித்தங் கலங்கிவிடையாமல்
கண்டவர்க்கெல்லாம்நான் தொண்டுசெய்யாமல்
மாயப்பிரபஞ்சத்தில் மாட்டிவையாமல்
மாதர்கண்ணம்பென் மனத்தில்வையாமல் இந்த

2 எங்கெங்குமேஉன் னுருவமாய் மின்ன
எண்ணம்வேறின்றி உனை னமுன்ன
மங்களநாமமென் வாய்நிதம்பன்ன
வார்த்தைகள்யாவுமுன் வார்த்தையாய்மன்ன இந்த

3 சுத்தசைதன்னிய நிலைமையில்சார
தோஷகர்மானுபங் தங்களுந்தீர
அத்தனேநித்த முனக்கன்புகூர
ஆனந்தவீட்டிலே நான்வந்துசேர இந்த

4 சூதுபொறாமைபொய் கோபமில்லாமல்
சோரமுலோபந்துர் மார்க்கங்கல்லாமல்
வேதநெறியை விலக்கிநில்லாமல்
வேதநாயகர் விளம்பச்செய்யாமல் இந்த

7

55. இராகம்-கமாஸ்-ரூபகதாளம்

பல்லவி.

ஏகபராபரனே கருணைப்பிர
வாகமனோகரனே

அநுபல்லவி.

தேகமுறும்பல மோகஉபாதிகள் யேகஎனக்கு
விவேகமருந்தருள் ஏக

சரணங்கள்.

1 சஞ்சலமானேனே மனம்நொந்து
தளர்ந்துபோனேனே
அஞ்சலெனத்தானே அடியனை
ஆண்டருள்வாய்கோனே
பஞ்சபூதாதிபிர பஞ்சமெலாஞ்செய்து
தஞ்சஞ்செயும்நிஷ்பிர பஞ்சப்பொருளான ஏக

2 சங்கடமாற்றாயோ எளியேன்
தன்முன்தோற்றாயோ
இங்கிதஞ்சாற்றாயோ தமியனை
யேகரையேற்றாயோ
அங்குமிங்கும்புவி எங்கும்உயிரெனத்
தங்கும்படிஅருள் பொங்குங்குணகர ஏக

3 நேயர்சகாயனே அருமறை
நீதிசொல்வாயனே
தூயவிகாயனே அமரர்கள்
சூழ்சமுதாயனே
மாயவிஷயாதி நோயணுகாமலே
தாயெனவேநாயகனே ஆளும் ஏக

---

56 இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

கருணைகடாக்ஷஞ் செய்வாயே-சுவாமி கருணை

அநுபல்லவி.

மருணசமாகவே மகிழ்வாகநீயே கருணை

சரணங்கள்.

1 அரியாயம் உலகவிர்த்தாந்தம்-இதில்
அழியா தவண்ணம்நீ அருள்வைஉபசாந்தம்
தனிஉன்றனோடு மேகாந்தம்-கொள்ள
சர்வதாகாலமு மெனதுசித்தாந்தம் கருணா
2 நாமரூபகமாம் பிரபஞ்சம் ஆன்ம
நன்மையை அழிக்கும் என்னுளும் இதுநெஞ்சம்
காமவிஷயாதிகளின் நெஞ்சம் நாளும்
கலங்கினேனின் பாத கமலமேதஞ்சம் கருணா
3 போதாந்தநிலைமை யுறுதேவநல்ல
புவனகோடிகள்செய் தளிக்கின்றகோவே
வேதாந்தரசமொழுகுகாவே நிதம்
வேதநாயகன் இதயவண்டுவளர்பூவே கருணா

---

57. இராகம் காம்போதி ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபரமநாதா நல்ல
அற்புதகற்பதம்பெறப் பொற்பதம்எனக்கருள்செய் ஆதி

அநுபல்லவி.

ஓதரும்உயிர்க்குயி ராகிஎங்கும்நிறையும்
பூதசராசரப்பொருள்கள் எல்லாம்உறையும் ஆதி

சரணங்கள்.

1 ஜீவன்பிழைக்கும்வழி அறியேனே நான்
தெற்குவடக்கறியாச் சிறியேனே
பாவலகரிகொண்ட வெறியேனே பந்த
பாசக்களையைவெட்டி எறியேனே
ஆவலுடனெங்கும் அலைந்தகம்வெம்பினேன்
வேதநாயகனே உன் திருவடிநம்பினேன் ஆதி
2 ஐயனேஎனக்கருள் ஊட்டாயோ கெட்ட
அகங்காரமெனும்பேயை ஓட்டாயோ
உய்யவழிஎனக்குக் காட்டாயோ
உள்ளத்தில்உன்பதத்தை நாட்டாயோ
பொய்யுலகநடையைப் பொருளெனநாடினேன்
மெய்யறிவில்லாமலே மிகமிகவோடினேன்

3 அண்டங்கள்படைத்தளித் தழிப்போனே கணம்
ஆகப்பல்கோடிகாலங் கழிப்போனே
தொண்டர்மனத்துயரம் ஒழிப்போனே நல்ல
சுசமுத்தரொடுகூடிச் செழிப்போனே
அண்டும்வேதநாயகன் அகத்தெரிர்ஜோதியே
மண்டும்வினைகளெல்லாம் மாற்றுதம்நீதியே ஆதி

## 58. இராகம்-பாசு, அடதாளசாப்பு.

பல்லவி.

ஜெகநாதா வினை அகலாதா ஜெக

அநுபல்லவி.

பகலோனென அரும்பல இருள்நீக்கும் ஜெக

சரணங்கள்.

1 பரிதாபம்பரிதாபம் ஐயா என்நிலைமை
பஞ்சப்புலாதியர்க் கார்தந்தார்தலைமை
தரைமிசைஎன்செய்கை யாவுமேபுலமை
தந்தருளிஞான சாஸ்திரப்புலமை ஜெக

2 அநுகூலசத்துரு வாகுமென்னுள்ளம்
அதுதினஞ்செய்வதெல்லாம் பெருங்கள்ளம்
தினமுமேபடிந்திடுந் தீவினைப்பள்ளம்
தீர்த்தெனையாட்டுவை திருவருள்வெள்ளம் ஜெக

3 ஈசனே அறநெறி எனக்கென்றும்விலக்கம்
என்பிழைகளை எண்ண இல்லையோ இலக்கம்
கூசியேநான்மிகக் கொண்டேன்கலக்கம்
குணவேதநாயகா கொடுத்தருள்துலக்கம் ஜெக

## 59. இராகம்-மத்தியமாவதி, திரிபுடைதாளம்.

பல்லவி.

இரக்கஞ்செய்வாயே ஐயா என்மேல் இரக்

அநுபல்லவி.

இரக்கஞ்செய்வாயோ புரக்கும்என்தாயே
ஏகமாகியயோகபூரண மாகமேபெற மோசமே அற இரக்

சரணங்கள்.

1 தேகநிமித்தம் செய்வதனர்த்தம்
யேகப்பிரசித்தம் யெங்கினேன்சித்தம்
இன்பமேவிய நின்பதாம்புய
அன்புதங்கிட துன்பமங்கிட இரக்
2 நானொருகூடன் நாயினுங்கேடன்
ஈனர்கள்சீடன் என்றும்பொய்வேடன்
ஈனமும்அவ மானமுங்கெட
ஞானமும்கன மோனமுந்தொட இரக்
3 உலகவியாபாரம் ஓயாவிசாரம்
கலகம்அபாரம் கர்மவிகாரம்
கஷ்டமும்கண நஷ்டமும்பெறு
துஷ்டனானன நிஷ்டனாகவே இரக்
4 தாசர்கள்நேசா தர்மவிலாசா
பாபவிநாசா பாக்கியப்பிரதேசா
பாதமேதொழும் வேதநாயகன்
மீதருள்மற வாதநாதனே இரக்

---

60. இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

பரனே பக்தர்சுதந் தரனே நாளும்
பக்ஷம்வைத்தென்னைசம் ரக்ஷணைசெய்தருள் பர

அநுபல்லவி.

இரவிகோடியென ஒளிவீசிடும்
யேகஅநேக வைபோகநிர்த்தேகாதற் பர

சரணங்கள்.

1 உன்னையல்லால்கதி பின்னையில்லையென்
றுனக்குத்தெரியாதா நாளும்
உற்றதன்பிள்ளையைப் பெற்றதாய்தள்ளின்
உலகஞ்சிரியாதோ மேகம்
தன்னைப்பயிர்வேண்டு முன்னே அருமழை
தானேசொரியாதா அந்தத்
தன்மைபோல்நீஉயர் நன்மையுதவிலென்
தாபம் மரியாதா

இந்நிலமீதினி லென்னைப்போலொர்ஜடன்
இல்லையேபைங்கிளிச் சொல்லையுற்றருடன்
மன்னமோகக்கடல் தன்னில்விழும்விடன்
மாளுமுன்னாளும் வந்தாளுவதுன்கடன் பா

2 நீவியஅண்டங்கள் மேவிய ஆகாயத்தில்
நிற்கச்செய்தாய்நீயே எந்தன்
நெஞ்சம்உன்தாளிணைக் கஞ்சம்படிந்திட
நீவரம்ஈவாயே உனக்
கோவியமோஇது காவியங்கொள்ளரும்
உத்தமஎந்தாயே எனக்
குன்னைத்தருமட்டும் நின்னை அல்லடா
தொழியுமோ என்வாயே
தீவினைநாச னெனப்புகழ்மாலையே
சேர்ந்தஉனக்கென்ன சாந்தர்கண்வேலையே
பாவியென்பாலுண்டு வேலைபல்காலையே
பட்டேன்பொய்விட்டேன் கும்பிட்டேன்உன்காலையே பா

3 நீதகலும்பஞ்ச பூதம்வளர்சர்வ
சாதகபூமியே வினை
தீர்ந்திடவேஞானக் காந்திசொரியும்
சர்வாந்தரியாமியே என்றும்
வேதநாயகன்நீ தருள்மறவாத
ஸ்வாமியே உண்மை
விளங்கவேவல வளங்கள்சாரும்நிஷ்
களங்கநேமியே
போதனேநீக்காயென் பாதகவெட்டையே
பொய்யுருவாகிய மெய்யெனுங்கட்டையே
நானேநீக்குமுன் சாதகநிஷ்டையே
நண்ணுடப்பண்ணுவாய் புண்ணியப்பிரதிஷ்டையே பா

---

## 61. இராகம்-யதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்பராமுகம் ஏதோஎந்தன்
முன்னம்வந்தாள் ஒண்ணுதோ இன்

அநுபல்லவி.

தன்னவரைரக்ஷிக்கத் தானேகங்கணமே
தரித்தவனேஎனை ஆதரித்தல்வங்கணமே

1 யார்க்கோசொல்லுவதுபோல் நீஅசட்டைசெய்யில்
எப்படித்தொலைப்பேன் என்கன்மக்கட்டை
மார்க்கமுடனேநீ மெய்ஞ்ஞானநிஷ்டைதரும்
மட்டும்நான்விடுவேனோ என் அலட்டை
மூர்க்கவினைகளுக்கு நானொருபேயோ
மூடமனமுமாயையும் ஒருகையோ
தீர்க்கமாகஉனைநான் அடுத்ததுபொய்யோ
தெய்வமேநீகைவிடில் என்செய்வேன்ஐயோ இன்னம்

2 தீனருக்குதவுவதே தியாகம்பெருஞ்
செல்வருக்கீவது துர்விநியோகம்
ஞானமுள்ளோர்க்குன் அருள்பிரவாகம் இன்னும்
நலம்அவர்க்கீவதில் என்னுபயோகம்
ஈனனானஎனக்கு ஞானசையோகம்
ஈவதுவேநல்ல தியர்கப்பிரயோகம்
நானுன்சந்ததி அதிலென்னசந்தேகம்
நான்விடேன்விடேன் பூர்வார்ஜிதபாகம் இன்னம்

3 பிள்ளைக்கும்தாய்க்கும் உண்டோபிணக்கு மிகப்
பெருகும்உன்கருணைக் குண்டோகணக்கு
கள்ளமயலுறு மென்மனக்குணக்கு நீக்கி
கனங்கொள்சன்மார்க்கத்தில் எனையிணக்கு
தள்ளரிதாகிய பரமசத்துவமே
சாக்ஷாதுலகெங்கும் விளங்குந்தத்துவமே
விள்ளரிதாகிய சர்வஞ்ஞத்துவமே
வேதநாயகன்தனக்குரிய சொத்துவமே இன்னம்

---

62. இராகம்-ஸ்ரீராகம்-அடதாளசாப்பு.

பல்லவி.

வேதநாயகா நம்பினேன் உனை வேத

அநுபல்லவி.

ஏதமும்விபரீதமுங்கெட
நீதமுங்கன பேதமுங்கொடு வேத

சரணங்கள்.

1 தினமும்உன் பணிவிடையே நான்மறவாமல்
செயஅருள் நன்னடையே
இனமாகும் அருட்கொடையே வழங்கிட
ஏனின்னமுந் தடையே
கனமுமேலவர் இனமும் நிர்மல
மனமும்உன் தரி சனமுமேயருள் வேத

2 பொய்வளர்மெய்க்கும்பமே உடையுமுன்
போதிபுண்ணியா யரம்பமே
தெய்வநிராலம்பமே என்கவிகளைச்
செவிகொண்டு இரக்கம்பமே
செய்குவாயுளம் வைகுவாயருள்
பெய்குவாய்வினை எய்குவாயுயர் வேத

3 தயைசெயிற் பொல்லாங்கா என்தனையாளத்
தாமதஞ்செயல் பாங்கா
பயன்உதவிடில்தீங்கா வேதநாயகன்
பரவுங்குண தராங்கா
நயமும்ஆணவ செயமும்நாளும் அ
பயமும்பாதபங் கயமுமேயருள் வேத

63. இராகம்-ஆகிரி, ரூபகதாளம்.

பல்லவி.

நாதனே தயைபுரிவாய் எனக்குமெய்ப்
போதமா மழை சொரிவாய் நாத

அநுபல்லவி.

தீத ல்பராபர திவ்யகுணாடம்பர
ஓதருஞ்சுயம்வர உலகமுடன் அம்பர நாத

சரணங்கள்.

1 நண்ணிநல்வினைகளைப் பண்ணியறிகிலாத
நான்நான்போவியா இந்த
மண்ணின்மிசை எனக்கும் புண்ணியமென்பதற்கும்
மத்தியில்வேலியா எந்தன்
எண்ணமெல்லாங்கறுப்பே
எனக்குன்னடி வெறுப்பே
பண்ணுதே நீமறுப்பே
பரிந்தாள்வ துன்பொறுப்பே நாத

2 என்பாட்டில் இயங்காமல் உன்பாட்டில் சும்மா
இருந்திடில் அதுதகுமா என்றும்
தன்பால்மகிழ்ந்தோனே இன்பூட்டுங்கதியுந்தன்
தயையின்றிக் கைபுகுமா எந்தன்
அன்பெல்லாம் வெறும்பேச்சே
அறமென்பது மேற்பூச்சே
துன்பப்பிரளயம் நீச்சே
தொல்புவியெங்கும் ஏச்சே

3 தினையளவும்நன்னெறி தனையறியாதநான்
தீவினைக்கேயிலக்கா பாரில்
தீவினையன்றிமற்றெவையும் நினையும் என்னெஞ்சுக்கு
நீமாத்திரவிலக்கா நன்மை
புனையும்நீதிப் பிரமாண
புவனக்கொடி நிர்மாண
விசுவநித்திய கல்யாண
வேதநாயகன் பிராண

64. இராகம்-பியாகு. ஆதிதாளம்.

பல்லவி.

தஞ்சம்நீயே தயைபுரிவாயே

அநுபல்லவி.

அஞ்சலென்றேதினம் ஆளும்என்தாயே

சரணங்கள்.

1 தினமனவேதை சேர்ந்தநான்பேதை
உனதடிப்போதைஉற அருள்பாதை தஞ்

2 பாதபஞ்சன பண்டித ரஞ்சன
போதககஞ்சன புண்ணிய நிரஞ்சன தஞ்

3 கருமசிங்காரா சருவசங்காரா
வரும்வேதநாயகன் மணஅலங்காரா தஞ்

65. இராகம்-பரசு, ஆதிதாளம்.

பல்லவி.

நீயேகதிஎனக்குன் அருள்கூரேதந்தை
தாயேநினைஅல்லது துணையாரே நீயே

அநுபல்லவி.

தூயகருணைமழை சொரிகாரே
சொல்லுஅறு நலமுறு தலமிசை நிலவென
மலஇருள் செலஅருள் அலரும் உதாரா நீயே

சரணங்கள்.

1 முத்தியென்பதிதவர்க்குண சமுதாயம் அது
முத்தர்மெட்டுக்கும்என்ப தென்னஞாயம்
நித்தியனேவிடுவேனோ என்தாடம்நீ
நீதியின்படிசெய்குவாய் விதாயம்
சத்தியனேஏதோ என அபிப்பிராயம்
தகவென தகமிசை மிகமதிபுகஅரும்
இகபரசுகமருள் அகல்ஜகநாதா நீயே

2 வாழ்மனைதங்கிடில் வேண்டாமே யென்று
மாநிலத்துண்டோ மறுப்பவர்தாமே
ஆழ்வேர்நீயெனது மனப்பூமேல்குடி
ஆகிடின்உனக்கென்ன குறையாமே
சூழநீகுடியுறில் வினைபோமே
துதிபுரிவிதியினர் கதியெனும்நிதிபெற
அதிதயை பதிவுறும் அதிசய யோகா நீயே

3 சாதகனேஎன் துயர் தெரியாதோ நல்ல
சர்வாந்தர்யாமியெனும் பெரியாயோ
பாதகம்அறஅருள் புரியாயோ பரி
பக்குவஞானமழை சொரியாயோ
வேதநாயகன்மனக் தரியாயோ
மிடலுறுசுடவான் உடுபதிதடவரை
கடலிடமுடன்இடர் கெடஅடர்தேவா நீயே

66. இராகம்-பூ ளம், ரூபகதாளம்.

பல்லவி.

தேவாதி தேவ திருவருள்
செய்தென்னை நீகாவே — தேவ

அநுபல்லவி.

ஜீவசம் ரக்ஷணைசெய்யுப கிருபசிதே
தினந்துஷ்டர்கள் இனஞ்சுட்டவர்
முனஞ்சிஷ்டர்கள் மனம் தொட்டமர் — தேவா

சரணங்கள்.

1 பாழுமனமேசுத்த பாஷாணம் பெரும்
பாபமென்றால் அதற்குக்கலியாணம்
வாழும்இன்றொலாழிந்து கிரியாணம் கிட்டி
வருமுன்னம் அருள்புண்ணியப் பிரமாணம்
ஏழையென்செய்கையுன்னில் எனக்குவரும் நாணம்
இறைக்குஞ்சுகம் அழைக்குந்தகை
தழைக்கும்படி பிழைக்கும்படி — தேவா

2 அருள்செய்யுனை அலதுன்னைவிடுவேனோ
அன்றுமற்றோரைக் கும்பிடுவேனோ
மருவுமயலிற்சிக்கிக் கெடுவேனோ உன்பால்
வழக்கிட்டிரக்கமீ பயப்படுவேனோ
மருள்செய்யும்பொருளை நீ வழங்கினுந்தொடுவேனோ
மனந்தங்கிடும் அனந்தந்துயர்
முனஞ்சுனங்கிடு கந்தங்கிட — தேவா

3 திஷ்டபாலகங்கண தாரணனே பெரும்
தீயபசாகண மாரணனே
துஷ்டகண்டன மந்திரோச்சாரணனே நாளுஞ்
சுயம்பிரகாச நிஷ்காரணனே
இஷ்டன்வேதநாயகன் ஏதவாரணனே
இணங்கண்டர்கள் கணங்கண்டிட
வணங்கும்படி குணங்கொண்டுயர் — தேவா

---

## 61. இராகம்-சீலாம்புரி. ஆதிதாளம்.

பல்லவி.

ஏகாதிபானே அருள்புரி யோகாதிதானே

அநுபல்லவி.

ஆகாமியமுமாம் மாகாமியன் ஆறும்
அகணிதசிற்பர அதிகுணதற்பர
இகபரகற்பத இணையறும்அற்புத ஏகாதி

சரணங்கள்.

1 பழிக்குநான்குருபீடம் பத்தனைப்போலநான்
பரிப்பது வெளிவேடம்
அழிக்கும்பொய்வாய்ப்படம் கொடுமாயைக்கென்
அகமே நடனகூடம்
செழிக்கும் வரங்கள் ஈவாய்
சிந்தையிற் குடியாவாய்
தினகரசுந்தர திருவருள்மந்தர
அனகநிரந்தர அகில துரந்தர ஏகாதி

2 படியாக்கொடு நெஞ்சமா ஐயனே அது
படருந்துர்க்குண பஞ்சமா
அடியேன் துயர்க்கொஞ்சமா வரப்பிரசாதம்
அருள் உனக்குப் பஞ்சமா
படியல்லாம் ஈன்றதாயே
பாரில்நற் கதினீயே
பரமபவித்திர பதித உபத்திர
தருமசமுத்திர சகல விசித்திர ஏகாதி

3 சுரசேவிதபாதா மலரகித
சுஜநவற்சல தாதா
வரதநாயகநாதா வேதநாயகன்
மனலால வியாதா
நரபரிபாலன் நடகுணலாலன்
நாகரீகத்துவ நாமமசத்துவ
போகபிரதத்துவ புண்ணியதத்துவ ஏகாதி

68. இராகம் தன்யாசி-ரூபகதாளம்

பல்லவி.

நிச்சயம்இதுதானே மதி நீயருள்கோனே

அநுபல்லவி.

கச்சுமரம்போல நானும்வளர்ந்தேன்
இச்சகந்தனில் இதயந்தளர்ந்தேன் — நிச்சயம்

சரணங்கள்.

1 அல்லும்பகலும் பொருளில்மயக்கம்
அநித்தியசுகங்களே என்னுறக்கம
நல்லவர்சபை எனக்குநீக்கம்
ஞானவழியில் நாளுந்தூக்கம் — நிச்ச

2 துஷ்டர்களுடனே அன்யோன்யம்
துர்க்குணமெல்லாம் சர்வமாங்யம் — நிச்ச
இஷ்டம்வைப்பதுவே தனதான்யம்
ஈசனே எனக் கதிசூன்யம் — நிச்ச

3 நீதுறும்எனக் குனதுவேதம்
செவிடன்காதிற் சங்கநாதம்
வேதநாயகனே உன்பாதம்
விரும்பிவாழ்த்தலே பிரமாதம் — நிச்ச

69. இராகம்-அடாணதாளம்.

பல்லவி.

கருணாசாகரா கனஉபகாரா
காத்தருள்வாய் கோவே — கருணா

அநுபல்லவி.

அருணோதயமென அடியர்க்குகாட்டும்
ஆத்மகோடிகள் உஜ்ஜீவன அமுதூட்டும் — கருணா

சரணங்கள்.

1 நிச்சயஞானமே நினதுஸ்வாதீனம்
நீதராவிடில் எனக்கேதுமெய்ஞ்ஞானம்
அச்சயமில்லாமலே அபயப்ரதானம்
அருள்செய்யின் அடியனுக்கில்லைசமானம் — கருணா

2 சிஷ்டன்போல்யாவர்க்குந் திவ்யப்பிரசங்கம்
செய்வதிலேஎன்னைப்போ லவர் சிங்கம்
சட்டமாய்நடப்பதே சர்வவில்லங்கம்
சாமிநீஅறியாயோ தமியன் அந்தரங்கம்

3 எத்தனையோசெய்தேன் உனக்கபராதம்
இதுநிமித்தம்உனக் கென்மேல்விரோதம்
அத்தனேபிழைப்பொறுத் தாள்வதேநீதம்
அருள்புரியஇனி வேண்டாம்விவாதம் கருணை

4 தலைவன் இல்லாவிடில் தழைக்குமோ ராஜ்யம்
தரையிலேநீயல்லால் சகலமும்பூஜ்யம்
விலகிடாதருள்உயர் விமலசாம்பிராஜ்யம்
வேதநாயகன்இன்னந் தானெனவியாஜ்யம் கருணை

---

## 70. இராகம்-தோடி-ஏகதாளம்.

பல்லவி.

தயைபுரியஇன்னந் தாமதமேது தயை

அநுபல்லவி.

பயநிவாரணா பாக்கியபூரணா
உயரும்ஆரணா உலககாரணா தயை

சரணங்கள்.

1 அத்தனேஒருசாணுகியகுக்ஷிக்
காகநான்ஊரெல்லாம் அலைந்திடும்பக்ஷி
நித்தமும்பேசுவேன் ஆயிரங்கக்ஷி
நீதிநெறியில்லா னிராக்ஷரகுக்ஷி தயை

2 தத்துவஞானத்தைத் தள்ளிப்போட்டேன்
சாமிநான்இந்திரியவாசலைப்பூட்டேன்
உத்தமன்எனக்கருள் பலதரங்கேட்டேன்
உதவிசெய்யாவிடில் உனைவிடமாட்டேன் தயை

3 சர்வவிநோத விசித்திரநிமாணா
சாசுவதமங்கள சுத்தகல்யாணா
பரமநித்தியானந்த பாக்கியஉக்கிராணா
பாலவேத நாயகபிரமாணா தயை

---

### 71. இராகம்-முகாரி-ரூபகதாளம்.

பல்லவி.

காத்தருள்வாயனைக் காத்தருள்வாய்

அநுபல்லவி.

சாஸ்திரம்வேதம் ஸ்தோத்திரமேசெய்ய
பாத்திரனேதயை க்ஷேத்திரனேதினம் காத்த

சரணங்கள்.

1 ஆனாலும்என்பாபம் அநியாயம்அநியாயம்
ஞானியைப்போல்காண்காட்டும் நடையேமுழுமாயம்
ஈனமுறுந்தமகுணங்கள் என்தனக்கேகாந்தாயம்
தீனனென்மேல்நீகோபஞ்செய்யிலென்ன ஆதாயம் காத்த
2 மாதாநீஉன்மகனுன் மன்னவனீகுடிநானே
தாதாநீயாசகனுன் ஸ்வாமிஅடியேனே
சாதகஞ்செய்சற்குருநீ தமியேன்சிஷன்தானே
ஆதாரமாகஉனை அடுத்துவந்தேன்சுரர்கோனே காத்த
3 வாக்குமனம்எட்டாத வாசாமகோசரனே
பாக்கியபலதான பரிபாலபரமேசுரனே
தேக்குமலவிருள்நாசஞ் செய்யும்உதயபாஸ்கரனே
ஆக்கும்வேதநாயக னுக்கிரகதாபரனே காத்த

---

### 72. இராகம்-தோடி-ரூபகதாளம்.

பல்லவி.

வாவாஜகநாதா வாவாஜகநாதா வாவா

அநுபல்லவி.

பாவங்களைநிர்மூலமாக்கப்
பரமார்த்தங்கள் கொடுத்துக்காக்க வாவா

சரணங்கள்.

1 தர்மாதர்மந்தெரியேன் ஜெப
தபசாதிகள் தரியேன்
கர்மம்அனுசரியேன்உனைக்
கண்டால் இனிப்பிரியேன் வாவா

2 எனைவிடலாமா பல
இடர்படலாமா
இனையேதொடலாமா ஏழை
வீணேகெடலாமா வாவா

3 வர்மஞ்செய்தல்முறையா எந்தன்
வாழ்நாள்வளர் பிறையா
தர்மந்தனிற்குறையா இன்னஞ்
சலஞ்சாதித்தல் பொறையா வாவா

4 ஆவோஷிதமுகனே நித்திய
அகலானந்தசுகனே
மேலோர்கள் சதுகனே தயை
மிகுப்வேத நாயகனே வாவா

---

### 73. இராகம்-சஹானு-ஆதிதாளம்.

பல்லவி.

கருணைநீசெய்யவேண்டுமே சுவாமி கருணை

அநுபல்லவி.

சரணுகதியென உனையடைந்தேனே
சாதகம்வேண்டிய உனைதொடர்ந்தேனே கருணை

சரணங்கள்.

1 மாயவாழ்வெனும் பெருவாரிதிச்சுழலே
மாட்டியேஅலேபடும் நானொருவிழலே
சாயமாகிசிறுகாற்றசைகுழலே
கழியும்போதுநற் கதிமலர்கழலே கருணை

2 சலத்தையல்லாது தாமரைக்குண்டோநிலேயே
தரையில்ஊன்றுப்பயிர் உடுக்குமோதலேயே
நிலத்திலேரீயலால் நிலேயெனக்கிலேயே
நிதமும்பார்த்தருள் நிரஞ்சனமலேயே கருணை

3 சந்திரசூரியர் உள்ளமட்டும்வாழ்நாளா
சாவையேஜெயித்திட என்கையில்வாளா
தந்தையேஎனது சோதனைக்குநான்ஆளா
சர்வசாதக பரமதயாளா கருணை

4 அகணிதகுண அகிலாண்டவிலாச
அபரிமிதானந்த தற்பரமேசா
விகசகிருபாகர விமலப்பிரகாசா
வேதநாயகன் இதயநிவேசா கருணை

### 74. இராகம்-ஈசமனோகரி-ரூபகதாளம்.

பல்லவி.

அபயம்நீயருளுவாய் ஆதியே அநுதினம் அபயம்

அநுபல்லவி.

உபயபாதம் நம்பினேன் ஓ அநாதியே அநுதினம் அபயம்

சரணங்கள்.

1 அலைகடற்சிறு துரும்புபோல அலைந்துவாடினேன்
உலைமெழுகெனஉள்ளமுருகி உன்னைநாடினேன் தினமும் அ
2 நீர்குமிழியைநிகரும் வாழ்வைநிலையென்றெண்ணினேன்
மூர்க்கமாககொடியபாவமுழுதும் பண்ணினேன் தினமும் அ
3 பாசக்காற்றிற்பஞ்சுபோலப் பறந்துதயங்கினேன்
ஆசைக்கடலில்மூழ்கிமூழ்கி அறிவுமயங்கினேன் தினமும் அ
4 ஆண்டவனீ அடிமைநான் எனை ஆளவொண்ணாதோ
நீண்டஉலகம்ஏழையென்றெனை நிந்தனைபண்ணாதோ தினமும்
5 புவனரக்ஷணகாரணார்த்த புருஷவேஷனே
பவவிமோசனவேதநாயக பலவிசேஷனே தினமும் அ

### 75. இராகம்-பியாகடை-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதோசோதனை இன்னம்என்சாதனை
ஏகாதிபதியேநிதியே எளியேன்மேல் ஏதோ

அநுபல்லவி

போதோதயசுர பூஜிதபாதா
பூதம்பஞ்ச காரணசுகநாதா ஏதோ

சரணங்கள்.

1 தந்தைதாயொடு பலதனையரைஎடுத்தாய்
தாரங்கள்மூவர்க்குச் சாசுவதம் கொடுத்தாய்
சொந்தமாகியஉடற் சுகத்தினைக்கெடுத்தாய்
ஸ்வாமிநீயிந்த வாறுகைபிடித்தாய் ஏதோ

2 ஒருகையால்அடிப்பாய் ஒருகையாற்பிடிப்பாய்
உதவியில்லாமலே உன்னெண்ணமுடிப்பாய்
பெருமலைகளையுமே பிடுங்கிப்பந்தடிப்பாய்
பிரமாண்டங்களைப் பிளந்திட இடிப்பாய் ஏதோ

3 துன்பஞ்செய்வதுபோல் சுகங்கள்க்கொடுப்பாய்
துஷ்டர்கள்மீதில் எப்போதுங்கையெடுப்பாய்
அன்புள்ளதாயைப்போல் அடியாரைஅடுப்பாய்
அவர்களைத்துயரணு காமலேதடுப்பாய் ஏதோ

4 அதுலஅக்ஷயகுரு பரகரவேஷா
அமிர்தவருஷ திவ்யமிருதுபாஷா
நிதுரநிர்தோஷா நிர்விகற்பவிசேஷா
வேதநாயகவந் திதகுணபூஷா ஏதோ

---

76. இராகம் தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதுபராமுகம் ஏழையென்மீது
ஏகனே யோகனே மாகனே தியாகனே ஏது

அநுபல்லவி.

வேதபோதக அநாதரக்ஷணனே
மேகவாகன தெய்வீகலக்ஷணனே ஏது

சரணங்கள்.

1 அநித்யசுகந்தாம் அதைநான்கெட்டேனே
ஆனந்தந்தரில் அநுபவிக்கமாட்டேனே
இனித்தஉன்பாதத்தில் இதயம்காட்டேனே
ஈனமாயை எதிர்த்துவாட்டேனே

2 ஐயனே என்னைக் கேளாமல்முன்னீயே
அரியமானிடஜன்மம் தந்தாயே
வையகமீதுநான் உனக்கொருசேயே
மதியருள்வாய்பெற்று வளர்ந்திடும்தாயே ஏது

3 முந்திநீபலருக்குக் காட்டினையுனையே
முக்தர்க்குக்கொடுத்தனை மோக்ஷமாமனையே
பந்தியிலாகுமோ ஓரவஞ்சனையே
பக்ஷமாயெனக்கருள் பரசுகந்தனையே ஏது

4 அகடகாகடன சமர்த்தியப்பிரதாபா
அசலசுஜநவாற் சல்லியநிஷ்கோபா
சகலசுலக்ஷண தத்துவசொரூபா
தாசன்வேதநாயகன் மனோதிபா ஏது

---

### 77, இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

ஆரணமயநயபூரணனே
உன்கமல அடிசரணம் ஆரண

அநுபல்லவி.

பாரகோரபரி காரகுணாகர ஆரண

சரணங்கள்.

1 உனைநிதம்நினைவுறும் எனை அடர்வினை அகலாதா நாதா
உலகமலகமயல்விலக இலகருளை நீதா
கனஉலகஜநபஅந்தநிகரமெய்
காவலா அடியிர் ஆவலா அருள்செய் ஆரண

2 துரிதரஹிதகுணசரித சுகிர்தபரமேசா நேசா
சுஜனபஜனமிர்து வசனரசினஇதிகாச
சரதவாதஅனவரதவிரத்தர
சாபமோசனபிர தாபவிலாசன ஆரண

3 கனககனபுவனகவன பரிபாலாமூலா
கரணசரணகுணகிரணபரண அநுகூலா
விகயநிலயல்வய விஜயமயஅபய
வேதநாயகன் மனோதயஅதிசய ஆரண

78. இராகம்-ரீதிகௌலை-ரூபகதாளம்.

பல்லவி.

சரணஞ்சர்வேசா எனைரக்ஷிக்கத்
தருணமிதுபிரகாசா — சர

அநுபல்லவி.

கருணையபர காயப்பிரவேசா
மரமசுகோதய பாபவிநாசா — சர

சரணங்கள்.

1 நீயேகுருமூர்த்தி உனக்குச்சிறு
நாயேன்வித்தியார்த்தி
தூயாஉபதேசஞ்சொல்லி இஷ்டபூர்த்தி
சயிற்குருசீஷர் இருவர்க்குங்கீர்த்தி — சர

2 நீதான்பரஞ்சோதி என உலகின்
மீதேபெருங்கியாதி
வேதமிளவிருள் விலக்குதல்நீதி
ஆதாரமாக உன்னருளைப்பிரசாதி — சர

3 ஆதிகாரணநாதா பரமஞான
ஜோதிமய அபேதா
பாதகமோசன பாக்கியப்பிரசாதா
நீதவேதநாயகா நித்தியசங்கீதா — சர

79. இராகம்-லலிதா-ரூபகதாளம்.

பல்லவி.

இன்னந்தாமதம் ஏது சஜநாதா — இன்

அநுபல்லவி.

நன்னயமதாகஉனை நம்பினவனுன் அலவோ — இன்

சரணங்கள்.

1 சீலம்அருளிற் செலவோ
சேயுனக்கு நான் அலவோ
மேலுமென்னதான் சொலவோ
வேலையுனக்குப் பலவோ — இன்

2 சாதுஜன ரக்ஷணனே
தாசர்கள்பிர தக்ஷணனே
கிருமிர்த பக்ஷணனே
கீர்த்திகொள் சுலக்ஷணனே இன்

3 ஈசனே நான் உன்னடிமை
எப்பொருளும் உன்னுடைமை
நேசமுடன் உன்மடமை
நீக்கிடுவ துன்சடமை இன்

4 சாதக குணுபரணு
சர்வபுவ நாதரணு
வேதநாயகன் ஸ்மரணு
வேகதுரித ஹரணு இன்

---

இராகம்-கெங்காதரணி, ஆதிதாளம்.

பல்லவி.

உனைநானே தொழுவரம் அருள்கோனே உனை

அநுபல்லவி.

வினயசுஜனசேவித பெருமானே
வேதமுடியில்நடனம் புரிவோனே உனை

சரணங்கள்.

1 சிந்தைமீதுனது பாதமேதியானம்
செய்யநீயருள்வாய் திவ்யஞானம்
தந்தைநீயறிவுமே சமவஸ்தானம்
தனயன்மீதில்லையோ அபிமானம் உனை

2 ஈசனேஎனது வார்த்தைகள் பொய்யே
இந்தவார்த்தையொன்று மாத்திரம்மெய்யே
பாசமூடுமனம் வெயிலுறுநெய்யே
பாவம்நீங்கும்படி நீதயைசெய்யே உனை

3 அடருமலசாதிகள் நிறைமேழை
ஆனயமான உடலாகியபாழை
திடமென்றெண்ணி நிறைப்பேன் அதிற்கூழை
சினஞ்செய்யாதே நான்மிகஏழை உனை

4 சகலலோகம் அடங்காதயர் காத்ரா
சமமிலாக்கபட நாடகசூத்ரா
சுகப்பிந்தாயக கிருபாகரநேத்ரா
அதிசெய்வேத நாயகன்மன க்ஷேத்ரா உனை

81. இராகம்-பூரிகல்யாணி, ரூபகதாளம்.

பல்லவி.

கருணாகரமூர்த்தி காப்பதுவே கீர்த்தி

அநுபல்லவி.

அருணோதயமா சரீர
அற்புதநராவதார கருணா

சரணங்கள்.

1 தேகம்வளர்ப்பதே என்விர்த்தி
தினந்துர்க்குணவே பிரவர்த்தி
ஏகமான சக்கரவர்த்தி
எனக்குநீயருள் பாபநிவர்த்தி கருணா

2 அற்பமானபோக போக்கியம்
அழிந்துபோம் இதுவேதவாக்கியம்
தற்பராநினைக்காணும் பாக்கியம்
தந்திடில்அதுசர்வ சிலாக்கியம் கருணா

3 பாதகந்தனைச்சர்வ நாசம்
பண்ணுவதில் உண்டோ பிரயாசம்
வேதநாயகா நின்னேசம்
விளங்கிட அருள்வாய் பிரகாசம் கருணா

82. இராகம்-பரசு, திரிபுடைதாளம்.

பல்லவி.

சித்தம் எப்படியோ ஐயாநின் சித்தம் எப்படியோ

அநுபல்லவி.

உத்தமனுகளன்னை உயர்த்திடுவாயோ
கர்த்தனேநீ என்னைக் கைவிடுவாயோ சித்

சரணங்கள்.

1 அருள்புரிவாயோ அருந்தவப்
பொருள்சொரிவாயோ
தருமவானும்படி தான்தெரிவாயோ
இருள்மூடும்பாவியென் றென்னைப்பிரவாயோ சித்

2 பாதம்சேர்ப்பாயோ எந்தன்மனக்
கேதந் தீர்ப்பாயோ
ஆதன்செய்வினை அடியோடேபார்ப்பாயோ
ஏதுங்கதிஇல்லானென் றிரங்கிப்பார்ப்பாயோ சித்

3 வாடிநொந்தேனே மெய்ஞ்ஞானக்கண்
மூடி நைந்தேனே
கூடியாள்வாயென்று நம்பிவந்தேனே
பாடும்வேதநாயகன் பருகுஞ்செந்தேனே சித்

---

83. இராகம்-சஹானா, அடதாளசாப்பு.

பல்லவி.

எப்படியும் பரமே நலம்பெற
ஈந்தருள்வாய் வரமே

அநுபல்லவி.

செப்பருமாணிக்க தீபசொரூபனே
தேவே கனமேநொந்தேன் மாவேரணவேவந்தேன் எப்

சரணங்கள்.

1 கேவலம்வாடினேன் கேள்விமுறையில்லையோ எந்தன்
சீவன்பிழைக்கச்செய்ய வல்லனீயல்லையோ
பாவனுளனைப் பண்ணுதல்பாரமோ
பாகேகனியேசத்தே ஒகோதனியேவித்தே எப்

2 அற்பன்ஆனாலும் அன்னைக்குப்பிள்ளை அல்லவோ
பற்பலவாபடித்துப் படித்துச்சொல்லவோ
கற்பகோடிகாலங்கண்டு முடிவில்லாக்
கண்மணியேபொன்னே விண்ணேஅணியசொன்னேன் எப்

3 இன்பதுன்பங்கள் இரண்டுஞ்சமசித்தமே தந்து
நின்பதசேவையிலெக்கச் செய்வாய்நித்தமே
அன்பன்வேதநாயகன் அசுத்தேயணி
ஆணிப்பொருளேமுத்த காணப்பருவோர்சொத்தே எப்

## 84. இராகம்-கலியாணி, அடதாளசாப்பு.

### பல்லவி.

உன்னையெனக்குக்காட்டையா காட்டாமல் சும்மா
ஒளித்தென்ன விளையாட்டையா

### அநுபல்லவி.

தன்னைப்பாராமலே தன்பிள்ளை கண்மூடி
அனம்வுட்டுந்தாயுண்டோ சாமிநீதயைகூடி உன்னை

### சரணங்கள்.

1 கறவைதனைப்பிரிந்த கன்றுகதறல்போலும்
கணவன்தனைப்பிரிந்த கலங்கும் உத்தமிபோலும்
இறகுகள்பறிகொடுத் தேங்கும்பறவைபோலும்
இருகண்ணுந்தெரியாத ஈனக்குருடர்போலும்
ஏங்கினேன்சுகம் நீங்கினேன் துயர்
தாங்கினேன்மனம் நீங்கினேன்நீ உன்

2 நினைக்க நினைக்கஎன்னெஞ்ச மெல்லாம்ருசிக்கும்
நினைப்புகழும்வாயே நித்தியாமிர்தப்புசிக்கும்
கனக்கும்நின்னடிகாணக் கண்கள்தினம்பசிக்கும்
கர்த்தனேஉனைக்கண்டார் கவலையெல்லாம்நசிக்கும்
கணத்திலேனுங் கனத்திலேனுமென்
மனத்திலேனும் சொர்ப்பனத்திலேனும்நீ உன்

3 விண்ணேகினையல்லாமல் வேறொன்றைத்தொடுவேனோ
மேதினியெங்குந்தேடி வேதனைபடுவேனோ
கண்ணேமணியேநினைக் கண்டால்நான்விடுவேனோ
கட்டிக்கொண்டானந்தம் கலக்கப்பின்னிடுவேனோ
கருத்தில்மூடுவேன் வருத்தம்போடுவேன்
நிருத்தமாடுவேன் விருத்தம்பாடுவேன் உன்

4 தேவனேஉன்னைக்கண்டால் கிட்டிதோஷந்தொடுமோ
திவ்யதேஜோமயம் என்தேகந்தனைச்சுடுமோ
கூவுங்கோழிமிதித்தாற் குஞ்சுமுடம்படுமோ
கொல்லுஞ்சிங்கமானாலும் குட்டிகள்அஞ்சிடுமோ
கோலனே அநுகூலனே பரி
பாலனேகன மூலனே நீ உன்னை

5 ஆணல்லபெண்ணல்ல ஐம்புதஞ்சுடரல்ல
அரியயன்சிவனல்ல அதுவல்லஇதுவல்ல
காணருமுன் திவ்ய காந்திவிரியும்கல்ல
கனவடிவினைக்காணக் காதல்கொண்டேன்வல்ல
காரணசுக பூரணகுண
தாரணகன ஆரணநீ உன்னை

6 தேனேகனியே தெவிட்டாததெள்ளமிர்தமே
சீனியேகரும்பே தித்திக்கும்இரசமே
வானேபுவியேசுக வாழ்வேபெரும்பதமே
மதிக்கும்வேதநாயகன் மகிழுமனோகரமே
வாடினேன்கவி பாடினேன்உனை
நாடினேன்தினந் தேடினேன்நீ உன்னை

---

85. இராகம்-பங்காளா-ஆதிதாளம்.

பல்லவி.

சஞ்சலமாய்நெஞ்சமிக உடைந்தேனே இனித்
தஞ்சமெனஉன்சரணம் அடைந்தேனே ஸ்வாமி சஞ்

அநுபல்லவி.

வஞ்சப்பிர பஞ்சமெனும்
நஞ்சருந்தி மூழ்கியே சஞ்

சரணங்கள்.

1 இட்டவலைபட்டவருந் மான்போலேவெயில்
சுட்டசலம்வெட்டகலும் மீன்போலேஸ்வாமி சஞ்

2 பொய்யுலகைமெய்யெனவே தடுமாறிநாளும்
ஐயகோகோமையலெனுங் கடுமீறிஸ்வாமி சஞ்

3 கொட்டுமத்திற்பட்டுடையுந் தயிர்போலே சலத்
தட்டுவரக்கெட்டுலரும் பயிர்போலே ஸ்வாமி சஞ்
4 பாய்புலியின்வாயில்உறுப் பசுப்போலே பெற்ற
தாய்கரம்விட்டேஅலறுஞ் சிசுப்போலே ஸ்வாமி சஞ்
5 ஈயவேசகாயமொன்றுங் கிடையாதோ நல்ல
தூயமனம்நீயருளத் தடையேதோ ஸ்வாமி சஞ்
6 மாயமலநோயகலும் விசுவேசா வேத
நாயகன்னேயமனுக்கு கைலாசா ஸ்வாமி சஞ்

---

86. இராகம்-சுத்தசாவேரி-ரூபகதாளம்.

பல்லவி.

தருணந்தருணந் தயைசெய்வாயையா ஓ
தேவ தேவா தரு

அநுபல்லவி.

ஒருவனே ஜன்மலய பாலா
ஓஓ மகானுபாவா தரு

சரணங்கள்.

1 சித்தஞ்சேற்றில் நட்டகம்பம்
ஜெகததில் இதற்குத் தினமும் கம்பம்
நித்தங்கவலை நிறைந்தகும்பம்
நீயேயினியெனக் கவலம்பம் தரு
2 சோதனைக்குநான் பாத்திரவானோ
துன்பமூட்டை சுமக்கநானோ
சாதகஞ்செய்யிற் பழுதுதானோ
தள்ளினுலும்நான் போவேனோ தரு
3 வயிர்வளர்ப்பதே என்வேலை
மற்றநோம் விஷயலீலை
உயிருக்குயிரே ஞானப்பாலை
ஊட்டுவாய்தொழுதேன் உன்காலை தரு
4 சப்தஸ்பரிச ரசசுகந்தா
தர்மரூப பிரமாநந்தா
வித்தகசுஜ நாநுபந்தா
வேதநாயகப் பிரபந்தா தரு

87. இராகம்-தேவமனோகரி-ஏகதாளம்.

பல்லவி.

இன்னமுந்தாமதமேன் என்சுவாமி

அநுபல்லவி.

உன்னதமாகிய துரியாதீதா
உலகாதிசர்வ காரணபூதா இன்ன

சரணங்கள்.

1 மழைமுகங்காணுப் பயிர்போல்வாடி
மாதாதனைவிட்ட சேய்போலோடி
தழையும்உன் குண சரித்திரந்தன்னைப்பாடி
சாமிநானுனையடைந்தேன் கதிதேடி இன்ன

2 பத்தனைபோலநான் போடுவேன்வெளிச்சம்
பாவத்தின்கடனுக்கு நானொருமச்சம்
அத்தனேமுனியாதேகொண்டேன் அச்சம்
அருவினைபோக்கிநீ அருள்வாய் ஸ்வச்சம் இன்ன

3 அரசேநீயெனைக் கைவிடலாமா
அருளேசெயில் உன்கைப்பொருள் போமா
திருவரம்ஈயா விடில்வினைசாமா
தேவமனோகர திவ்யசோமா இன்ன

4 அனவரதசுகிர்த ஆத்மசொரூபா
அனந்தகல்யாணகுண அனகப்பிரதாபா
தினகர தினகரனாகியதீபா
சிறியன்வேதநாயகன் இதயசல்லாபா இன்ன

---

88. இராகம்-சாமா-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைத்தவிர வேறென்னைத்தாங்கிடப்
பின்னைத்துணையில்லை மன்னர்க்கரசே உன்னை

அநுபல்லவி.

அன்னைக்கிணையாகிய கனபிரபுவே
உன்னர்க்கரிதாகிய மாவிபுவே உன்னை

சரணங்கள்.

1 நீமுகம்பார்த்திடில் அணுவும்பர்வதமே
நீமுனிந்தால்பெரு மலைகளும்அதமே
தாமதம்நீசெயிற் பிழைப்பதெவ்விதமே
தயைபுரிய இச்சமயம்உசிதமே உன்னை

2 நீரை அடுத்தவர்க்கிலை நலகஷ்டம்
நின்னை அடுத்தவர்க்குண்டோ அதிகஷ்டம்
ஆரையடுக்கினும் உண்டோ அதிர்ஷ்டம்
ஐயாநினக்கன்பனாக என்னிஷ்டம் உன்னை

3 ஊரார்மெச்சிடப் பாடுவேன்பாட்டு
உன்புகழ்பாடவென்றால் வாய்ப்பூட்டு
சீராகிய பெரியோர் சபைதீட்டு
தீயோருடனெனக் கனுதினங்கூட்டு உன்னை

4 ஆதிமத்தியாந்த அபாவம்பிரகாரா
அண்டசராசர அகிலாதாரா
பூகநிர்மாண நிர்வாகசங்காரா
போதவேதநாயகா புண்ணியசரீரா உன்னை

89. இராகம்-சுத்தசாவேரி-ஆதிதாளம்-

பல்லவி.

நானே உனை நம்பினேனே-நலம்
தானே அருள்கனவானே

அநுபல்லவி.

வானேஎனச்சுகத் தேனேபொழிந்திடும்
மன்னுபிர-சன்னதினம்-என்னுவுறும்-முன்னுநிதம் நானே

சரணங்கள்.

1 காயும்பலதுவாரக் கந்தல் அதைக்
காக்கநான்போடுவேன் வாய்ப்பந்தல்
மாயவலையிற்பட்டு மதியும்விதியும்கெட்டு
மண்டுவினைகொண்டுமிக அண்டுதுயருண்டுதினம் நானே

2 அருணகோடிப்பிரகாசகாத்திரா அதி
அற்புதவேதாகம சாஸ்திரா
கருணாநந்தநேத்திரா ஜனபக்தஜனஸ்தோத்திரா
காப்பாய்முகம்-பார்ப்பாய்வினை-தீர்ப்பாயடி-சேர்ப்பாய்நிதம்

3 விபுதகணவுந்திதச் சரணாரும்
வேதநாயகன் அந்தக்கரணா
சுபமங்களதாரண-சுஜநகுணதாரண
தூயாகன-நேயாபுவித்-தாரணசகாயா-நிதம் நானே

90 இராகம்-சஹானா-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவேளைவந்துன் அருள் தந்தருள்வாய் இந்த

அநுபல்லவி.

வந்தனைநிரந்தரம் புரிந்தேன்ஐயனே இந்த

சரணங்கள்.

1 அன்னைபிதாஉன்னையன்றிப் பின்னையாரையா
என்னைநிதந்தின்னும்வினை தன்னைத்தீரையா
மின்னுகின்றபொன்னுலகந் தன்னில்வாழ்மெய்யா இந்த

2 பூதலத்தில் ஆதரவுன் பாததுணையே
பேதகமாயேதுனக்கிங் கோதஇணையே
நீதகலுஞ்சாதகர்க் கபேததுணையே இந்த

3 தீயநெஞ்சில் தூயஅறத் தோயஇலையே
மாயையெனும்பேய்செய் அநியாயமலையே
நேயன்வேதநாயகனுக் காயநிலையே இந்த

91. இராகம்-சாமந்தா-ஆதிதாளம்.

பல்லவி.

மெஞ்ஞானங் கொடுப்பாய்ஸ்வாமி
அஞ்ஞானந்தடுப்பாய் ஸ்வாமி மெய்

அநுபல்லவி.

பொய்ஞ்ஞானியர் அல்லாற்மேற்கருணை
பூண்டவனேஎன் ஆண்டவனே மெய்

சரணங்கள்.

1 ஆஸ்திகள்பாஸ்திகள் யாவையும்வேண்டேன்
அநித்தியப்பொருள்நீ அருளினுந்தீண்டேன்
சாஸ்திரம்சொல்லும்வழி இனிதாண்டேன்
தருவெனநீண்டேன் திருவடிபூண்டேன் மெய்

2 அகமேகட்டுக் கடங்காக்காளை
ஐயோவீணே அழிந்ததுநாளை
இகமேலே நம்பினேன்மலர்த்தாளை
என்னவோநாளை இதுநல்லவேளை மெய்

3 அந்நியர்க்குரைப்பேன் நான்உபதேசம்
அடியேன்செய்கைகளே ஆபாசம்
என்சொல்வேன்என் இதயப்பசாசம்
இதற்குன்மேல்நேசம் இல்லாவலேசம் மெய்

4 அத்தனேஎளியர்க் கன்னமும்ஊட்டேன்
அறுத்தகைக்குச் சுண்ணம்புமேநீட்டேன்
உத்தமமார்க்கத்தில் உள்ளத்தைநாட்டேன்
உனைவரங்கேட்டேன் இனிவிடமாட்டேன் மெய்

5 அவள்அவள் அதுவென அடங்காமூலா
அங்காதநீத அபேதவிசாலா
சிவமுறுவேத நாயகன் அநுகூலா
ஜெகபரிபாலா சுகமுறுசீலா மெய்

92. இராகம்-பரசு-ஆதிதாளம்.

பல்லவி.

தேவாதிதேவபல ஜீவாதிகாரனுஉன்
சேவடியைநம்பினேனன்ஓ தேவாதி

அநுபல்லவி.

நாதாநானேபல தேவாரம்பாடவே
நாதாவரம்நீதாகன தேவாதி

சரணங்கள்.

1 அகஇருள்மூடினேன் மிகமிகவாடினேன்
அஞ்சாதேயென்றுசொல்லி அருளொண்ணாதோ
இகபரம்நாடினேன் சுகமிலதேடினேன்
என்மேல்இறக்கம் உனக்கேக நண்ணாதோ
பகவானேநீயெனது முகம்நோக்கியேதயை
பண்ணியருள் புண்ணியர்தொழும் தேவாதி

2 அன்னையும்பிதாவும்நீ ஆவியும்உடலும்நீ
ஆசாரியன்கடவுள் யாவும்நீயே
முன்னும்நீபின்னும்நீ முத்திநீ சித்திநீ
மூலாதிகாரணமும் மூர்த்தியேநீயே
நின்னைசவாசியில் நான் எந்நேரமும்பாடிய
நித்தியப்பல சித்தியருள் தேவாதி

3 ஏழைநான் அல்லவோ என்னதான்சொல்லவோ
ஈசாஎன்மீதுதயை எண்ணுவாயோ
பாழுடலைநம்பினேன் தாழுமனம்வெம்பினேன்
பாசாந்தகாரம் அறப்பண்ணுவாயே
சூழும்அடியார்கள்மனம் வாழும்வேத நாயகா
சுத்தமுறு சித்தம்அருள் தேவாதி

---

93. இராகம்-பலஹம்சா, ஆதிதாளம்.

பல்லவி.

ஞானமார்க்கம் நாமேசேர
நல்வரம் அருளையனே ஞான

அநுபல்லவி.

ஈனஅசேதன இருள்வழி நீங்கத்
தானமுமோனமுந் தர்மமும்ஓங்க ஞான

சரணங்கள்.

1 நீசனானும்உன் தாசனன்அலவோ
நின்னை அல்லால்தெய்வம் இன்னமுமலவோ
ஈசனேஎன்குறை எவரிடஞ்சொல்லவோ
என்மொழிகாட்டிலே எரித்திடுநிலவோ ஞான

2 கர்த்தனேஒழியாக் கவலைபிரபஞ்சங்
கண்ணியிற்பறவைபோற் கலங்கினேன்நெஞ்சம்
உத்தமகுணங்கா உனக்குண்டோபஞ்சம்
உன்னையல்லாலினி வேறிலை தஞ்சம் ஞான

3 அமரர்நரர்சோபன அமிர்தக்ஷணனே
அனந்தபேதக ஜீவாத்மரக்ஷணனே
சமரசஞானசற் குணசுலக்ஷணனே
தாசன்வேதநாயகன் பிரதக்ஷணனே ஞான

---

94. இராகம்-சஹானு, ரூபகதாளம்.

பல்லவி.

உதவிசெய்யலாகாதா ஓ ஜகநாதா

அநுபல்லவி.

நிதநிதம்உன திணையடிகளை
நெஞ்சில்நினைத்திட வரம்நீ உதவி

சரணங்கள்.

1 அடியேன் துயர் படவேதகுமா
சுடமுன்னிருள் தானேபகுமா
கொடிதாகிய வினையால்நிலை
குலைந்தேன்மனம் மலைந்தேன் உதவி

2 மனைவாழ்வுறு துயர்தான்மலையே
உனையல்லது கதிவேறிலையே
அள்ளியேகொடு வினையால்மனம்
அயர்ந்தேன் தினம் பயந்தேன் உதவி

3 சுரசேவித பரமேசுரனே
நரபோஷக கருணாகரனே
வரவேத நாயகனேகுண
வானே பரம் பரனே உதவி

95. இராகம்-சாளங்கபைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைமறவாமல் எனக்கருள்வரமே
பரமே சுபகரமே உன்னை

அநுபல்லவி.

பொன்னைநாடொளியர்போலும் எக்காலம்
அன்னை தனைமறவாப் பிள்ளைபோலும் உன்னை

சரணங்கள்.

1 மங்களமாகப்பெரு வாழ்வுவந்தாலும்
சங்கமுடன்கன தாழ்வுவந்தாலும் உன்னை

2 பூமண்டலம்எங்கும் புகழ்ச்சிவந்தாலும்
சமங்கொள்மாலையென இகழ்ச்சிவந்தாலும் உன்னை

3 மகிழ்வுறவேவெகு மானம்வந்தாலும்
இகழ்வுறவேகன ஈனம்வந்தாலும் உன்னை

4 தலைகீழாஇத்தரை புரண்டாலும்
அலைகடல்பெயர்ந்ததன் கரைபுரண்டாலும் உன்னை

5 அருமையாகிய சதானந்தநிலையே
மருவும்வேதநாயகன் மகிழ்கலையே உன்னை



96. இராகம்-கண்டா, ஆதிதாளம்.

பல்லவி.

வா வா வா தேவே வந்தெனைக்
காவாயே கோனே வா வா

அநுபல்லவி.

காவார்பூவே கலையோ பாவே ஓவே தாவே
ஓ ஓ வேதாவே வா வா

சரணங்கள்.

1 வனவேடன் வலையேமாட்டி மனநோயுறுங்கலையே
எனவேதுயர் அலையே சார்ந்தஎன் இடர்யாவையுந்தொலையே
வனமார்கிலையே மதியோர்கலையே
கனமார்குண மலையே வா வா

2 உடல்விழுந்திடுமுனமே பரனேஉனையே அநுதினமே
திடமாஎன்மனமே நினைந்துறம்செயவே அருள்கனமே
அடியார்தனமே அயலார்சினமே
படியார் தமக்கினமே வா வா

3 நினையாஎன்மதியே உடல் நிதமும்செயும்சதியே
வினைதீர்த்துதநிதியேபரவும் வேதநாயகன்நிதியே
அனைவோர்நிதியே அருவாரிதியே
தனைநேர் பரகதியே வா வா

---

## 97. இராகம்-உசேனி, ஏகதாளம்.

பல்லவி.

தருணம்ஈதையா இக்காலஹரணம் ஏதையா

அநுபல்லவி.

கருணையால்உலகனைத்துந் தாங்குபகாரா தீரா உதாரா
காணும்பிரபஞ்சம் தனிற்சிக்கிக்
கோதும்என்னெஞ்சம் அனுதினம்
பேணும்பொய்வஞ்சகம் இனி உந்தன்
மானடிதஞ்சம் எனைத்தொடர்
கருமந்தனையேநீக்கி தருமந்தனைநிலையாக்க தரு

சரணங்கள்.

1 ஆண்டான்அடிமையை வேண்டாமெனத்தள்ளி
ஐயா புகலினி ஏது மிக
நீண்டநின்கால்களைப் பூண்டுகொண்டேன்
நீ எங்கினிச்செல்வதோது சற்றும்
தீண்டாதெனைத் தள்ளினும் விடுவேனோ
திருவே தருவே குருவே
தீனன்என்மீது ரினதபி
மானம்விடாது தினமதி
யீனன்செய்தீது தொலையமெய்ஞ்
ஞானம்நீஓது பழுதறு
சித்தத்தமரும்கோவே கர்த்தத்துவ முறுதேவே தரு

2 நீயெனைநீங்கிடில் எங்கும்உள்ளோனே
நின்பெயர்க்குறைவாமே அழுஞ்
சேயர்தமக்கமு தீயாதிருப்பரோ
சிறந்த அன்னையர்தாமே வரம்
ஆயிரந்தரங் கேட்டுக்கொடாதிட
அழகா குழகா பழகா
தற்றபொன்போலே நடையின்றி
முற்றமென்மேலே பலகலை
சுற்றிப்பொபமாலே கொண்டேன் என்றன்
சிற்றறிவாலே நினைநிதம்
ஆளாய்பலபுவிகாத லா நலமுறுநீதா தரு

3 எத்தனைசொல்லினுஞ் சித்தம்நன்மார்க்கத்தில்
என்றும்பதிந்திட இல்லை மிக
இத்தரைஎங்கும் பிரசித்தனேசற்
றிளகச்செய்வாயிந்தக் கல்லை உயர்
வித்தனே வேதநாயகன் போற்றிடும்
வேதா நாதா அபேதா
மின்னும்பிரக்கியாதா அடியன்மேல்
இன்னமும்வாதா எனை அஞ்சல்
என்னஒண்ணுதா நின்காதில் என்
சொன்னுழையாதா அநுதினம்
வேதத்தமர் சர்வேசா நீதற்றனர் மனவாசா தரு

98. இராகம்-பூரிகல்யாணி, ஆதிதாளம்.

பல்லவி.

நம்பினேன் உனையே தர்க்காத்தருள்
வெம்பியஎனையே அநுதினம் நம்பினேன்

அநுபல்லவி.

அம்புவியெங்கும் நிரம்பும்பல் உயிர்க்
கின்பம்பொழிபுயலே உன்றன்செயலே
உண்டோ அயலே அனுதினம் நம்பினேன்

சரணங்கள்.

1 புவனகாரண பவநிவாரண நவ உதாரணனே
சம்பூரணனே மெய்காரணனே அநுதினம் நம்பி

2 கோரவினைப்பரிகார அகிலவிஸ்தார அதிகார
உபகாரா அதிதீரா அநுதினம் நம்பி

3 சுகுணசேகர மிகுமனோகர சுகிர்த சாகரனே
பராபரனே தயாபரனே அநுதினம் நம்பி

4 பஜிக்கும்தொண்டர்கள் புசிக்கபுசிக்க ருசிக்கும்
தேன்மயமே அதிசயமே அருள்நயமே அநுதினம் நம்பி

5 வேதநாயகன் போதமுறப் பிரசாதம் அருள்பொருளே
மனஇருளே தொலைத்தருளே அநுதினம் நம்பி

99. இராகம்-நாகத்தொனி-திஸ்ரம், திரிபுடை-தாளம்.

பல்லவி.

தேவாதிதேவனே ஜீவனேபிர பாவனே தேவாதி

அநுபல்லவி.

ஜீவாதிகாரனே தீரனே சூரனே
ஜெகத்திலே மனம்வாடி நொந்தேன்
மகத்துவேவுனை நாடிவந்தேன் தேவாதி

சரணங்கள்.

1 எங்கும்நிறையும்நீ எனக்குன்னைக்காட்டாய்
ஈதென்ன கண்கட்டு மாயமோ
அங்கும் இங்குமே உனைத்தேடி
அலையவைத்தா யிதுஞாயமோ
தங்குபதேசம் செய்யாயின்மை
தான் அடியேன் சிறுபிராயமோ
எங்குலதெய்வமே தாயே தந்தையே
இதுதான்புத்திர நேயமோ கன தேவாதி

2 எத்தனையோபிழை செய்தேன் அப்பிழை
எண்ண உன்னாலும் கூடுமோ
கத்தனேநீ அருள்செய்தால் என்னோடு
கரும்ப்பேய் போராடுமோ
அத்தனேயென்பால் நீவரில் உந்தன்
அடிகள்வருந்தி வாடுமோ

இத்தலம் நீவரில் முத்தர்கள்சமுகம்
எங்கேஎன் றனைத் தேடுமோஉயர் தேவாதி

3 அருளிற்பெரிய நீ மருளிற்பெரியனு
ஆதரிப்பதுன் பாரமே
பொருளிற்பிரியனு யிருளுக்குரியனுய்ப்
புரிந்தேன்துர் வியாபாரமே
ஒருமைப்பாடறு மனதுக்கேதினம்
ஊரெல்லாம் சஞ்சாரமே
திருஅற்புதனே வேதநாயகனே
செய்வாய்நீ உபகாரமே ஒரு தேவாதி

---

100. இராகம்-குந்தளவராளி, ஆதிதாளம்.

பல்லவி.

நிதநிதம் உனையே தொழுதேனே
பதமலர் அருள்கோனே நிதம்

அநுபல்லவி.

சுத்தவைபோகா சகலநிர்வாகா
மதுரைப்பிரவாகா வரகுணயோகா நிதம்

சரணங்கள்.

1 அரம்வரஇலையே அகம்வரவிலையே
மறம்ஒருமலையே மணமொருசிலையே
புறமயல்வலையே புகுமதிகலையே
துறவறநிலையே துயர்வினை தொலையே நிதம்

2 மலர்வலர்நீயே மணமொருபேயே
புலமொருநாயே புவிகொடுமாயே
பலவிதமாய் படர்வுறும்நோயே
தலமிசைநீயே தயைபுரிவாயே நிதம்

3 அடியவர்இனமே அருமலர்வனமே
கொடியவர்சினமே குறையறுதனமே
முடிவறுதினமே முறையுறுகனவே
அடிதொழுவேத நாயகன்தரிசனமே நிதம்

101. இராகம்-சாமா, ஆதிதாளம்.

பல்லவி.

என்ன சொன்னாலும்நீ இரங்காதிருப்பது
ஏதோ குணக்கடலே

அநுபல்லவி

உன்னதஏகனே உலகாதிர் வாகனே என்ன

சரணங்கள்.

1 இகசுகம் அநுசிதம் என்பதென் அபிமதம்
தகவுறும் உயர்பதம் தாவெனவே நிதம் என்ன
2 இன்னமும் என்முனம் எனக்குநின் றரிசனம்
மன்னஎன் கண்முனம் வாவெனவே தினம் என்ன
3 மாயை படரந்திரம் மாறலர் தந்திரம்
நீயருட் சுதந்திரம் நீட்டென நிரந்தரம் என்ன
4 உலகவியா பாரமே ஒழியா விசாரமே
கலகசம் சாரமே கவலை அபாரமே என்ன
5 அருமறை வாசகா அடியர்பிர யோசகா
தருமப்பிர தாயகா தனிவேத நாயகா என்ன

102. இராகம்-இந்துஸ்தான் காப்பி, ரூபகதாளம்.

பல்லவி.

நாதா அடியேன்மீதேன் கோபம்

அநுபல்லவி.

ஆதாரமாகவே அகிலத்தைத் தாங்கும் நாதா

சரணங்கள்.

1 தாரம்சுதர்இல்லாச் சந்நியாசிஎன்றேனோ
சீரூரில்லாப் பரதேசி என்றேனோ நாதா
2 தந்தைதா யில்லாத தனியர் யென்றேனோ
எந்தஉயிரும்பெற்ற இனியர் என்றேனோ நாதா
3 மன்னும்மனைப் பொருள்இல்லா வறியர்என்றேனோ
சின்னஅணிவும் நுழைசிறியர் என்றேனோ நாதா

4 உரியஆண்பெண்ணல்லா ஒருத்தர்என்றேனோ
விரியபலயுகங்கண்ட விருத்தர்என்றேனோ நாதா

5 ஆதிஅந்தம்இல்லா அநாதி என்றேனோ
சாதிகுலமில்லா நிர்சாதி என்றேனோ நாதா

6 வீடுவாசல் இல்லாத வெளியர் என்றேனோ
ஈடன்னம் துணியில்லா எளியர் என்றேனோ நாதா

7 மனம்புகுந்தொளிர்கின்ற மாயர் என்றேனோ
உனும்நெஞ்சுக் கெட்டா உபாயர் என்றேனோ நாதா

8 சகல உலகச்சுமை தாங்கி என்றேனோ
மிகநரர் அன்புக்கு வீங்குஎன் றேனோ நாதா

9 மற்றோர் கண்ணிற்படாத மானிஎன் றேனோ
முற்றும்வாய் பேசாத மௌனி என்றேனோ நாதா

10 குணமில்லார் களைக்காயும் கோபி என்றேனோ
அணிஅங்க மில்லா அரூபிஎன் றேனோ நாதா

11 சீர்பேர்இல்லா அநாம தேயர் என்றேனோ
ஆருந் துணை யில்லா அபாயர் என்றேனோ நாதா

12 மாதின்றி உலகீன்ற மாயம் சொன்னேனோ
வேதநாயகா இன்னம் வேறென் சொல்லேனோ நாதா

---

103 இராகம்-பியாகு, ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைப்போல் எனக்குற்றபேர்கள் இந்த
உலகந்தனில் உண்டோ

அநுபல்லவி.

அன்னை தந்தை குருவேதேவே இந்த அகிலகாரண பிதாவே உன்னை

சரணங்கள்.

1 தந்தைதாய்க்கு மனஸ்தாபம்வரில்
சாற்றுவார்கள் பலசாபம் மண்ணில்
எந்த நேரமுமே பாபம் செய்யும்
எனக்குநீசெய்வது லாபம் உன்னை

2 அண்ணன் தம்பிக்குண்டு பாகம் அதை
அடையுமட்டும் அவர்ஸ்நேகம் பின்பு
எண்ணுவார்கள்பல துரோகம் நீ
ஈவைநன்மைகள் அநேகம் உன்னை

3 மனைவிபாலர்க்கன்ன வஸ்திரம்தரும்
மட்டுமேஅவர்கள் மித்திரம் பின்பு
நினைவர்செய்வர்பல சூத்திரம் என்றும்
நீடும்உன்னருள் சமுத்திரம் உன்னை

4 ஏவல்மன்னர்க்குண்டு திறையே அதை
ஈந்திடாதவர்க்குச் சிறையே உன்னை
மேவினோர்க்கில்லை குறையே தொழும்
வேதநாயகன் தன் இறையே உன்னை

---

104. இராகம்-காப்பி, ரூபகதாளம்.

பல்லவி.

நாளே நல்லநாள் புண்ணியம் செய்யும்

அநுபல்லவி.

ஆளும் வேதநாயகன் தாளினை பூசிக்கும் நாளே

சரணங்கள்.

1 பாபமில்லாதகால க்ஷேபமும் சுர்ஜனசல்
லாபமுமேபரம லாபமாகக்கொள்ளும் நாளே

2 வேதமும்பெரியவர் போதமும்தேவசங்
கீதமும் முதலான நாதங்களுடன் செல்லும் நாளே

3 ஞானமும் ஜீவாபி மானமும் பரன்பத
தியானமுமேசெய் மோனநிலையில் நிற்கும் நாளே

4 பத்தினி சுதர்குடும் பத்தவர் யார்க்கும்
சித்தநிர்மலமுடன் பக்தி புரிந்திடும் நாளே

5 கூனர்குருடர்அங்க ஈனர்பிணியுடையோர்
தீனர்முதலியோர்க்குத் தான தருமஞ்செய்யும் நாளே

105 இராகம் சாவேரி ஆதிதாளம்.

பல்லவி.

ஏதோ இன்னம் வாதோ இரங்காதோ உன்மனமே

அநுபல்லவி.

வேதவரோதய விமலற்சந்திரோதய
விததகுணகுண உததமசிரேஷ்ட
பக்தர்கள்பழுதறு சித்தஅபீஷ்ட ஏதோ

சரணங்கள்.

1 ஐம்புலர்வேடர் வேட்டை ஆடிதிரியுங்காட்டை
வெம்பாசப்பேய்வாழ்வீட்டை விரும்பியேதுன்பமூட்டை
மேவிமனம்அயர்ந்தேன் நிலையில்லாப்
பூவின்சுகம்வியர்த்தேன் அநுதினமும்
பாவவழிநயந்தேன் இனிமேல்வரும்
சாவயெண்ணிப்பயந்தேன் நிரந்தரம்
தரைமுதலாகளங்கும் விரியும்சுந்தரமே
அரியகருணைமழை சொரியுங்கந்தாமே ஏதோ

2 நியமமொறு விபாபாரம் தீர்த்திடவேயிங்கோரம்
நீயருள்பரிகாரம் நின்பதமேஆதாரம்
நேசஅபிமானம் சற்றுஇல்லாமல்
பேசுவேன்ஞானம் எனக்குறவ
லேசம்அநுஷ்டானம் இலையேஉப
தேசசன்மானம் கொடுத்தருள்செய்
தினமனமகிழ்வுறு கனதிரவியமே
அனவரதமும்ஒளிர் தினகரமே ஏதோ

3 நிர்க்குமிளனவே நிலையாவாழ்வுகனமே
பார்க்குள்உனைனவே பரிந்தருள்வாய் கனமே
பாசம்குலையாத எனக்குமோகா
வேசம்கலையாதா உலகம்செய்யும்
மோசம்தொலையாதா உன்மீதுகன
நேசம்நிலையாதா நிலைபெறு
நிதநிரஞ்சன அபேதசகுணமே
வேதநாயகன்மனப் போதமர்மனமே ஏதோ

106. இராகம் பந்து ஆதிதாளம்

பல்லவி.

நீயேசர்வசக்தன் நல்ல
நிச்சயனேகன அக்ஷயனே நீயே

அநுபல்லவி.

தாயுந்தந்தையுந் தமரும்அற்றாயே
மாயுந்தொழிலறு வாழ்வுபெற்றாயே நீயே

சரணங்கள்.

1 பல்லாயிரமண்டபம் படைப்பாய் உடைப்பாய்
எல்லாஉலகமும் எள்ளினுள் அடைப்பாய் நீயே
2 அஸ்திவாரத்தூண் அருஞ்சுவரிலையே
பத்தியாநீசெய்த பகிரண்டகிலையே நீயே
3 பலபொருள்தாங்கிடும் பர்வதம்போலே
தலையண்டகோடிகள் தாங்குவாய்மேலே நீயே
4 திருநெய்செப்பில்லாத் தீபங்கள்போலே
பரிதிசந்திரமீன் பலசெய்தாலே நீயே
5 அண்டம்அகண்டம் அடங்காதசரீரம்
தொண்டர்கள்மனமலர் சுக்குமோபாரம் நீயே
6 பாரபூதங்கள்உன் பணிசெய்யுஞ்சரியே
சூரியன்உடலுடற் சோதிமுன்கரியே நீயே
7 ...ம்பலகோடிகள் உனக்கரைக்ஷணமே
நிகழுமுக்காலமும் நினக்குக்கிரகணமே நீயே
8 சகலர்க்கும்ஊட்டித் தானென்றும் உண்ணாய்
நிகழ்பெறுங்காவலால் நித்திரைபண்ணாய் நீயே
9 தினகரசந்திர தீபம்ஏற்றிடுவாய்
தனமுகிற்கடத்தால் மழையூற்றிடுவாய் நீயே
10 நடவாய்பறவாய் நாடெங்குமிருப்பாய்
உடலாய்உயிராய் உவர்வாய் பொருப்பாய் நீயே
11 மரங்களி னுழைந்தே மலர்தர கிளைப்பாய்
கரங்களில்லாதே கருமங்கள் விளைப்பாய் நீயே

12 கண்ணுப்பொருள்களைக் காட்டுவாய்பார்ப்பாய்
அண்ணுசகலமும் ஆட்டியேதீர்ப்பாய் நீயே
13 கனைகடல்உனதருட் கடலினோர்திவலை
இனிவேதநாயகா எனக்கென்னகவலை நீயே

---

### 107. இராகம்-தோடி, ரூபகதாளம்.

பல்லவி.

ஞானகுருபரவடிவே அருமறை நான்முடிவே

அநுபல்லவி.

மோனசுகாசன சம்பிரமம்
முத்தியளித்திடும் சித்தியபரப்பிரமம் ஞான

சரணங்கள்.

1 பாமரனுனஎன்மீதுனக்குக் கிருபைஇலையா எந்தன்
பாவம்தொலைத்தெனை ஆளவுனக்கொருமலையா
தாமதம்நீசெய்யா தேகம்எனக்கென்னநிலையா நிதம்
தஞ்சம்பதகஞ்சம்பிர பஞ்சம்தருநஞ்சம்தொலை ஞான

2 தீனகிருபாநிதியென்றுபேர் கொண்டநீஅலவா அருள்
செய்தெனைஆள்வதினுல் உனக்கியாதொருசெலவா
ஆனமலர்ப்பதம் அண்டும் நன்கிள்களநீஇலவாபுவி
அஞ்சும்புலன் அஞ்சும்பகை நெஞ்சும்செயும் வஞ்சகம்தொலை

3 நின்மலநித்திய நிறஞ்சனநீதவிநோதா நாளும்
நிகியசராசரம்யாவையும் தாங்கும்பிரக்கியாதா
தன்மவிலாச சுகாநுபவானந்தநீதா எனைச்
சாடும்வினை வாடும்வழி பாடும்பர வீடும்கொடு ஞான

4 நம்பும்அடியவர் துன்பம்அகற்றுங் குணுளாபவ
நாசமகேச பிரகால விலாச சடையாளா
அம்புவியில் வேதநாயகன் போற்றும்பொற்றுளா இங்கும்
அம்புவிளக்குப்புகழ் தங்கும்பகிரங்கம்பெறு ஞான

---

108. இராகம்-ஈசமனோகரி, ஏகதாளம்.

பல்லவி.

மெய்யிது மெய்யிது மெய்யிது தேவே

அநுபல்லவி.

ஐயையே என்செய்வேன் அருள்புரிகோவே மெய்

சரணங்கள்.

1 மலர்க்துணைபோற்றாத வாயனும்நானே
கலந்துநின்பணிசெய்யாக் காயனும்நானே மெய்

2 கண்டுநீர்பெருகாத கண்ணனும்நானே
அண்டும்பாவியர்க்கெல்லாம் அண்ணனும்நானே மெய்

3 நிதம்உனைநினையாத நெஞ்சனும்நானே
மதங்கொண்டுதிரிகின்ற வஞ்சனும்நானே மெய்

4 கனிந்துனைச்சேவியாக் கரத்தனும்நானே
தினம்தினம்வணங்காத சிரத்தனும்நானே மெய்

5 கருதிஉன்புகல்கேளாக் காதனும்நானே
கருதியைமறுத்திடும் சூதனும்நானே மெய்

6 கடுகஆலயம்செல்லாக் காலனும்நானே
முடுகியவினைக்கெல்லாம் மூலனும்நானே மெய்

7 போதஅபேத புனிதநிஷ்கோபா
வேதநாயகன்தொழும் விமலச்சொரூபா மெய்

---

109. இராகம்-சாமா, ரூபகதாளம்.

பல்லவி.

பரப்பிரம்மமே திருவருள் தரல்கிரமமே அனுதினமும்

அநுபல்லவி.

வரகுண சுகாநுபவ
சுரகணபூஜித வைபவ

சரணங்கள்.

1 செய்வதெல்லாந் தீவினையே
தினையளவும் உனை நினையேன்
தெய்வமேநம்பினேன் உனையே
தீர்த்தருள்வாய்துயர் தனையே பர

2 அறியேன் மேற்குக் கிழக்கு
அன்புமில்லேன் கின் கழற்கு
சிறியேன்மேல் ஏன் வழக்கு
ஜெபதபத்தில் என்னைப் பழக்கு பா

3 பாழ்மனமோவல் கிருப்பு
பாவம் அதற்குக் கரும்பு
தாழ்வுருநான்சிறு துரும்பு
சாமியென்மேல்மனக் இரும்பு பா

4 கினையேன் தர்மம் அதர்மம்
கிலமிசைநான்மூட ஜென்மம்
அனையே ஏதின்னம் வர்மம்
அகற்றிடுவாய் எனது கர்மம் பா

5 அகண்டமண்டலாதி பத்திய
ஆதியந்தரகித நித்திய
மிகுந்தருணபரண சத்திய
வேதநாயகன் ஸ்துத்திய பா

110. இராகம்-பியாக், ஆதிதாளம்.

பல்லவி.

பாதம்நம்பினேனே போதம் அருள்கோனே

அநுபல்லவி.

வேதமுதலோனே மாதவர்பிரானே பாதம்

சரணங்கள்.

1 ஆதாவுநீயே ஐயனே என்தாயே
வாதைமலநோயே மாற்றி அருள்வாயே பாதம்

2 தீங்குகள்அநேகம் செயதிடும்என் துரோகம்
நீங்கிடவிவேகம் நீயருள்இமோகம் பாதம்

3 முத்தர்கள்சமுகனே முக்கியபிரமுகனே
உத்தமசுகனே ஓவேதநாயகனே பாதம்

### 111. இராகம்-கனகவசந்தம், ஆதிதாளம்.

பல்லவி.

நீயே துணைபரனே துன்பம்
நீங்கிட அருள்வரனே நீயே

அநுபல்லவி.

மாயாதிமிர நீஜபதினகரனே
தாயாகியசர்வ சாதககரனே நீயே

சரணங்கள்.

1 அடியேன்செய்வதெல்லாம் அரும்பாபம்
கொடியன்மீது கொள்ளாதேகோபம் நீயே
2 பண்ணேன் துதியே யடியேன்விதியே
கண்ணேமணியே கதியேநிதியே நீயே
3 உனையேநம்பிடில் உண்டோபயமோ
அனையேவினைதீர்த் தருள்வாய்ஜெகமே நீயே
4 மாதவம்உடையவா மகிழ்மலரகிதா
வேதநாயகன்தொழும் விபுதர்கள்சகிதா நீயே

---

### 112. இராகம்-பைரவி, திரிபுடைதாளம்.

பல்லவி.

நாதாகன வேதாதினம் நீதாவரமே

அநுபல்லவி.

போதாசுக தாதா அதி இயாதாபிர சாதாபுவி நாதா

சரணங்கள்.

1 நித்தியம்அநித்தியம் சுகித்தினைமதித்திடு
வைத்தியம்விடுத்தினிய சத்தியம் உதித்திடவே நாதா
2 சுந்தரமடந்தையர்கள் சந்திரமுகந்தனை
நினைந்தென்றுநினைந்தனைசெய் தந்திரம்ஒழிந்திடவே நாதா
4 சொப்பனமேஒப்பனைகொள் அற்பஉடலைபொருள்
எனப்பிரியம்வைப்பதற நற்பலன்உவப்புதன நாதா

4 மாதர்மிகுபூதலமேல் ஆதரம்பெறுதபடி
சாதகப்பிரபோதமருள் வேதநாயகன்புகழும் நாதா

---

## 113. இராகம்-நாதநாமக்கிரியை, ஆதிதாளம்.

பல்லவி.

வேதநாயகனே மெய் மெய் மெய் வேத

அநுபல்லவி.

பாதகம்செய் துழலும்பாழ்மதியே ஐயன்
பாதகங்கள் அன்றி நமக்கார்கதியே
பூதலவாழ்வினொடு புகழ்நிதியே வெறும்
பொய் பொய் பொய் பொய் வேத

சரணங்கள்.

1 அத்தமியாதொளிற் திவாகரனை அதி
அற்புதமான சிவாதரனை
சித்தமிசைஒளிர் சுதாகரனைத் துதி
செய் செய் செய் செய் வேத

2 பூதலமெங்கும் இசைபோனவனை அதி
புனிதனைஉயிர்க்குயிர் ஆனவனை
மாதவர்காணுகின்ற மாதவனை உன்னுள்
வை வை வை வை வேத

3 காதபூகபௌதிகஸ்தாபகனை வேத
நாயகன்மீதிலென்றும் ஞாபகனை
ஓதரிதானஏவ வியாபகனைப் பணிந்
துய் உய் உய் உய் வேத

---

## 114. இராகம்-கௌளிபந்து, ஆதிதாளம்.

பல்லவி.

ஓ ஓ ஜெகநாதா ஒருதரம் உதவிடல் ஆகாதா

அநுபல்லவி.

தேவே தினப்பல பலவேடாடி என்
நாவே இளைத்தேன் ஓ ஓ

